# மகளிர் வளர்த்த தமிழ்

அ. ச. ஞானசம்பந்தன்



கங்கை புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை-600 017.

# முன்னுரை

உலக மொழிகள் பலவற்றிலும் இல்லாத சிறப்பு ஒன்று தமிழில் உண்டு. இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்ச் செழித்து வளர்ந்த மொழிகளாகிய கிரேக்கம், இலத்தீன் முதலியவை இன்று பழைய நிலையில் இல்லை. மக்கள் சமுதாயத்தில் செம்பாதியினராகிய மகளிர், அம்மொழி வளர்ச்சியில் பங்கு கொள்ளவில்லை போலும்! அதனை முழுத்தன்மை பெற்றதென்று கூற முடியுமா? ஆனால், அவற்றின் வாழ்வுக் காலத்திலேயே வீறுடன் விளங்கிய நம் மொழி, இன்றும் அந்த வீறுகுன்றாமல் இருக்கின்றதெனில், அதற்குரிய காரணம் யாது?

நம்முடைய நாட்டைப் பொறுத்த மட்டில் நிலைமை வேறு விதம். இங்கு ஆடவர், பெண்டிர் ஆகிய இருபாலருமே இவ்வளர்ச்சிக்கு உதவியுள்ளனர். சங்ககாலம் என்று வழங்கப்படும் அப்பழைய நாளில் நம் நாட்டு மகளிர் மொழி வளர்ச்சிக்கு மட்டுமா உதவினர்? அவர்கள் புகுந்து பணி ஆற்றாத துறையே இல்லை என்று கூறலாம். அரசியராய் இருந்து நாடாண்டனர்; தூதுவராய்ச் சென்று சந்து செய்வித்தனர்; ஆசிரியராய் இருந்து அறிவு கொளுத்தினர்; இன்னம் எத்துணையோ துறைகளில் அவர்கள் தொண்டு நடைபெற்றுள்ளது.

—அ. ச. ஞானசம்பந்தன்

# உள்ளுறை

# மகளிர் வளர்த்த தமிழ்

## 1. பாரி மகளிர்

வீட்டில் தொட்டிகளிலும் கொல்லைகளிலும் செடிகள் வைத்து வளர்ப்பதுண்டா நீங்கள்? குழந்தைகள் செடி வளர்க்கத் தொடங்கினால், முழு மூச்சுடன் கவனத்தை அதில் செலுத்துவதைக் காணலாம். அந்தக் குழந்தைகளுள்ளும், பெண் குழந்தைகள் அலாதியான இனம். ஆண் குழந்தைகள் செடி வளர்ப்பதற்கும் பெண் குழந்தைகள் வளர்ப்பதற்கும் வேறுபாடு உண்டு. தங்கள் பல வேலைகள் நடுவே இவ்வளர்ப்பையும் ஒரு தொழிலாகக் கொள்வார்கள் ஆண் குழந்தைகள். ஆனால், பெண் குழந்தைகளோ எனில், தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்தி இதில் ஈடுபடுவார்கள். செடி வளர்ப்பதே தங்கள் வாழ்நாளில் பெரிய அலுவல் என்று கருதி நடப்பவர்கள் போல, முழுக் கவனத்தையும் அதில் செலுத்துவார்கள். தாய் தனக்குக் குடிப்பதற்காகத் தந்த பாலையும் தேனையும் தான் வளர்க்கும் செடிக்கு ஊற்றி வளர்த்தாளாம் ஒரு பெண்! **'நெய்பெய் தீம்பால் பெய்து இனிது வளர்ப்ப'** (நற். 172) என வரும் பாடல் அடி இதனை அறிவிக்கின்றது.

இதனால், வளர்க்கும் செடிக்குப் பாலும் நெய்யும் ஊற்றும் அளவிற்குத் தங்களை மறந்து ஈடுபடக்கூடியவர்கள் பெண்கள் என்பதை அறியலாம். சாதாரணமாகச் செடி வளர்ப்பதில் மட்டும் பெண்கள் இவ்வாறு செய்கிறார்கள் என்றில்லை. கவிதையாகிய செடியையும்

இவ்வாறே முழுக் கவனத்துடன் வளர்ப்பவர்கள் பெண்கள். இவ்வாறு கூறுவதால், ஆண் மக்கள் கவிதை சிறப்புடையனவல்ல என்று கூறுவதாக நினைத்துவிட வேண்டா. மகளிர் புனையும் கவிதைகளில் அவர்களது உணர்ச்சி வெள்ளம் மிக்குப் பாய்கின்றது என்பதே கருத்தாம்.

எதில் ஈடுபட்டாலும் முழு மூச்சுடன், பெண்கள் ஈடுபடுவார்கள் என்று கூறும் பொழுது இதனையே குறிப்பிடுகிறோம். ஆண் மகன் எதில் ஈடுபட்டாலும் தன்னை மறந்துவிடுவதில்லை. ஈடுபடும் தான், ஈடுபாட்டைத் தரும் பொருள், ஈடுபாடாகிய அனுபவம் என்ற மூன்றையும் ஆண் மகன் மறப்பதில்லை. ஆனால், பெண்கள் ஈடுபடும் பொழுது இவ்வாறல்லாமல், ஈடுபாடு அல்லது அனுபவம் ஒன்றே எஞ்சி நிற்கின்றது. அவ்வனுபவத்தில் பெண்டிர் தம்மையே மறந்துவிடுகின்றனர். அதனால், அவர்களுடைய அனுபவம் ஆண் மகனது அனுபவத்தைக் காட்டிலும் ஆழமும் வலிமையும் உடையதாகிறது. இவ்வாறு ஒன்றில் ஈடுபடுவது பல சமயங்களில் அல்லல் விளைக்கவும் கூடும். ஆனாலும், அத்தகைய ஆழ்ந்த அனுபவம் மிக மிகத் தேவையாகும்.

பத்தி வழியில் சென்ற அடியார், ஆழ்வார் அனைவரும் தம்மைப் பெண்களாகக் கருதிக் கொண்டு பாடியதன் ஆழ்ந்த கருத்து இதுவேயாகும். காதல் இன்பத்திற்கூடத் தலைவன் தன்னையே முற்றிலும் மறப்பதில்லை. ஆனால், தலைவியோவெனில், முற்றிலும் தன்னை மறந்த நிலையில் ஈடுபடுகிறாள். ஆண்டவனது கருணை வெள்ளத்தில் முழுவதும் அமிழ்ந்துவிடும் இயல்பு, ஆண் தன்மை இருக்கும் வரை வருவதில்லை. எனவே, அவ்வாறு ஒரு பத்தன் தன்னை மறந்து பத்திப் பெருவெள்ளத்தில் மூழ்கும் பொழுது பெண் தன்மையை அடைந்து விடுகிறான். இதனாலே தான் தங்களைப் பெண்ணாகக் கருதிக் கொண்டு பெரியார்கள் பாடினார்கள்.

இவ்வுண்மையை மறவாமல் நாம் மனத்துட்கொண்டு பெண்களின் பாடல்களைக் கண்டால், அவர்கள் அனுபவத்தின் ஆழத்தை ஒருவாறு அறியலாம். சங்க காலத்திலிருந்து சமீபகாலம் வரை அவர்கள் பாடிய பாடல்கள் தனித் தன்மை பெற்று விளங்கக் காணலாம். தமிழ்ப் பயிரைப் பலரும் வளர்த்தனர் என்பது உண்மை தான். எனினும், மகளிர் வளர்க்கும் பொழுது, தம் ஊனையும் உயிரையும் அதனுள் சொரிந்து வளர்த்தனர். அவர்களால் பாடப் பெற்றவர் யாராயினும், இவ்வுண்மையைக் காணலாம். அரசன் முதல் ஆண்டி வரை யாரைப் பாடினாலும், முழுத் தன்மை பெற்ற பாடலாகும் அவர்களது பாடல். நகைச் சுவை, அவலச் சுவை, வீரச் சுவை முதலிய எச்சுவை அமையப் பாடினாலும், ஆழ்ந்த அனுபவத்திலிருந்து தோன்றுவன அப்பாடல்கள்.

வீட்டிற்கு விளக்கம் தருபவர்கள் பெண்கள் என்பதை அனைவரும் அறிவர். **'மனைக்கு விளக்கம் மடவார்,'** எனப் பழைய பாடல் ஒன்று பகர்கிறது. 'மனைக்கு விளக்கம்' என்பதற்கு யாது பொருள்? வீட்டில் வாழ்பவர் இன்பமாக வாழ்வதற்குரிய பொருள்களைத் தந்து மனங்களிக்கச் செய்வதே விளக்கந் தருவதாகும். உணவால் மட்டும் மனங்களிக்கச் செய்துவிட முடியுமா? எனவே, அறிவாலும் உதவுபவர் பெண்டிர் என்பது அப்பழம் பாடலால் அறியப்படுகிறது. பெண்டிர் கற்றறிவுடையவராய் இருந்தாலன்றி, அறிவால் எவ்வாறு உதவுவர்? பழந்தமிழ்ப் பெண்டிர் பலரும் சிறந்த கற்றறிவுடையவராய் இருந்திருக்கின்றனர் என்பதை அந்தக் கால இலக்கியங்களை ஒரு முறை புரட்டினவர்களும் அறிதல் கூடும். அவர்களை **ஔவையார், பாரி மகளிர், ஒக்கூர் மாசாத்தியார், முடத்தாமக் கண்ணியார், நப்பசலையார், வெள்ளி வீதியார், காக்கை பாடினியார்** என்று அடுக்கிக் கொண்டே போகலாம்.

இவர் அனைவரும் இற்றைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இத்தமிழ் நாட்டில்

வாழ்ந்த மகளிராவர். அக்கால எல்லையில் ஆயிரக்கணக்கான பெண்கள் வாழ்ந்திருத்தல் கூடும். எனினும், அவர்கள் அனைவரும் இன்று, பொய்யாய்க் கனவாய்ப் பழங்கதையாய்ப் போய் விட்டார்கள். ஏன்? காலம் என்னும் பெருமணற்பரப்பில் தம்முடைய காலடிகளைப் பதித்து வைக்கக் கூடிய செயல் ஒன்றையும் அவர்கள் செய்யவில்லை. ஆனால், மேலே கூறிய சில பெண்களை மட்டும் காலதேவன் கூட ஒன்றும் செய்ய இயலவில்லை. ஆம்! அவர்கள் பாடிய பாடல்கள் மூலம் என்றும் வாழக்கூடிய சிரஞ்சீவித்துவம் பெற்றுவிட்டார்கள். அப்பாடல்கள் மூலம் அவர்கள் இரண்டு பெரிய பயன்களைப் பெற்றுவிட்டார்கள். தமிழ் இலக்கியம் நல்ல கவிதைகளைப் பெற்று வளர வழி செய்தார்கள்; இலக்கியத்தை வளர்த்த பெருமையால் தாங்களும் நிலைபெற்று விட்டார்கள்; நிலைபேறு இல்லாத இவ்வுலகில் நிலைத்து விட்டார்கள்.

**"மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே!"** (புறம். 165)

இப்பாடலுக்கு இலக்கியமான மகளிர் எத்தனை பேர்! அவர்கள் பாடியுள்ள எண்ணற்ற பாடல்களுள் சிலவற்றைக் காண்போம்.

* * *

**பா**ரி வள்ளல் ஒரு சிற்றரசன்; மிகச் சிறிய பறம்பு நாட்டை ஆட்சி செய்தவன். அவனுக்கு இரண்டு புதல்வியர் இருந்தனர். பாரியின் நண்பராய் வாய்த்தார் கபிலர் என்னும் புலவர் பெருமான். பழந்தமிழ் இலக்கிய உலகின் சக்கரவர்த்தியார் கபிலர். அத்தகைய புலவரிடம் கற்றுத் தேர்ந்தனர் பாரி மகளிர் இருவரும்.

பாரி, யார் எதனைக் கேட்டாலும் வாரி வழங்கும் காரணத்தால், வள்ளல் என்ற பட்டப் பெயரைப் பெற்றான். மனிதர்களைப் பாடாத சுந்தரமூர்த்தி

நாயனார்கூட **'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பார் இலை,'** என்று புகழ்ந்து பாடினார். முல்லைக் கொடி ஒன்று கொழு கொம்பு இல்லாது வாடியதைக் கண்ட பாரி, தான் ஏறிச் சென்ற தேரையே அந்தக் கொடி பற்றிப் படர்வதற்குரிய கொழு கொம்பாக நிறுத்தி விட்டுப் போனான் என்றால் அவனது வள்ளல் தன்மையை என்னென்று புகழ முடியும் !

பாரியின் புகழ் நாடெங்கும் பரவியது. சிற்றரசனாகிய பாரிக்கு வளரும் புகழைக் கண்டு, சேர சோழ பாண்டியர் என்ற மூவேந்தரும் பொறாமை கொண்டனர். உடனே, அச்சிற்றரசன் மேல் மூவரும் படையெடுத்தனர். பாரியின் தலைநகரும் கோட்டையும் பறம்பு மலையின் மேல் இருந்தன. அம்மலையை முற்றுகையிட்ட மூவேந்தரும், நாட்கணக்கில் கீழே காத்துக்கிடந்தனர். எத்துணை நாட்கள் முற்றுகை இட்டாலும், பாரியைப் போரில் வெல்ல முடியாதென்றும், அவனிடம் பரிசிலாகக் கேட்டால் எதை வேண்டுமானாலும் பெறலாம் என்றும் கபிலர் மூவேந்தர்கட்கும் அறிவித்தார். அதைக் கேட்ட அவர்கள் திரும்பிச் சென்று விட்டார்கள். சென்றுவிட்ட அவர்கள், மிக இழிவானதும் தவறானதும் ஆகிய ஒரு செயலைச் செய்யத் துணிந்தனர்.

மூவேந்தரும், நடனமாடுகின்ற கூத்தர் போல வேடம் போட்டுக்கொண்டு பாரியிடம் வந்து கூத்தாடினர். அவர்கட்குப் பரிசிலாக 'யாது வேண்டும்? என்று பாரி கேட்டான். 'நீ தான் வேண்டும்,' என அக்கொடியவர்கள் கேட்டுவிட்டார்கள். வள்ளல் பாரி அவர்களுடன் சென்றான். இவ்வாறு வஞ்சகமாக அவனைக் கொன்று, தமிழ் நாட்டுக்கு அழியாப் பழியைத்தேடித் தந்தனர் மூவேந்தரும்.

பாரி இறந்த மறுமாதம். ஒரு நாள், பூர்ணிமை நிலவு வீசிக்கொண்டிருக்கிறது. முதல் மாதம் பூர்ணிமையில்

பாரியும் அவன் மகளிரும் நிலவில் அமர்ந்து மகிழ்ந்திருந் தனர். ஆனால், இந்தப் பூர்ணிமையில் அவன் போய் விட்டான். அவர்கள் மட்டும் இருக்கிறார்கள். நிலவைக் காண அவர்கள் துயரம் ஆறாய்ப் பெருகுகிறது. வீரனுக்கு மக்களாய்ப் பிறந்தமையின், போரில் அவன் இறந்திருந் தால் ஒருவேளை அவ்வளவு வருத்தப்பட்டிருக்க மாட்டார்கள். ஆனால், வஞ்சித்துக் கொல்லப்பட்டதால், அவர்கள் துயரம் எல்லை கடந்ததாகி விட்டது.

'பெரிய மன்னர்களாம் மூவேந்தர்களும்! சிறிய சிற்றரசனை வஞ்சகமாகக் கொல்பவர்கள் எவ்வளவு பெரிய வீரர்கள்! இவர்கட்கும் எவ்வளவு பெரியபடை இருக்கிறது! வெட்கம்! வெற்றி முரசம் அடிக்கிறார் கள், மானத்தை விட்டு விட்டு! சிறிய மன்னனைப் போர் செய்து கொல்ல முடியாமல், வஞ்சகமாகக் கொன்ற இவர் கட்கு ஏனோ இந்த வெற்றி முரசம்!' என இவ்வாறெல் லாம் நினைந்து வருந்துகிறார்கள் பாரியின் அருமை மகளிர் இருவரும்.

ஆனால், இவ்வளவு விரிவாகக் கூற முடியுமா கவிதை யில்? இவ்வாறு கூறினால் அதைக் கவிதை என்றுதான் கூற முடியுமா? எனவே, குறிப்பாக ஒரு சொல்லில் இவ்வளவு இகழ்ச்சியையும் கொட்டித் தீர்த்து விடுகிறார் கள் அப்பெண்கள். இதோ, பாடலைப் பாருங்கள்! அவலச் சுவை (சோக ரஸம்) பொங்கி வழிவதைக் காணலாம்.

**'அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவில்**
**எந்தையும் உடையோம்! எம் குன்றும் பிறர்கொளார்!**
**இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவில்**
**வென்றுஎறி முரசின் வேந்தர்எம்**
**குன்றும் கொண்டார்! யாம் எந்தையும் இலமே!'**

(புறம். 112)

பாடல் மிக எளிதாகப் புரியக்கூடியதுதான். கடைசி அடியிலேதான் எவ்வளவு அவலச் சுவை! 'போன மாதம்

எங்கள் தந்தையாரும் இருந்தார்! எம் மலையும் இருந்தது; இந்த மாதம் எம் மலையும் இல்லை; தந்தை யாரும் இலர்!' என்று கூறும் போது அவர்கள் மனத்தில் வெடித்துப் பொங்கி வரும் துயரத்தை நாமும் அனுபவிக் கிறோம்! நான்காவது அடியில் காணப்படும் எள்ளல், வெறுப்பு ஆகிய சுவைகள் எவ்வளவு! 'வெற்றி முரசினை யுடைய வேந்தர்கள்' என்று கூறும் சொற்களில், 'அட! இவர்களும் மானத்தை விட்டு, வெற்றி முரசை வைத்துக் கொண்டுள்ளார்களே?' என்று மூவேந்தரையும் எள்ளி வருந்துகிறார்கள். ஆழ்ந்த துயரத்திலுங்கூட இச்சுவை வெளிப்படத்தான் செய்கிறது.

ஐந்தே அடிகளையுடைய இப்பாடலைப் பாடியதன் மூலம் பாரி மகளிர் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் உதவி, தாமும் தம் தந்தையைப் போல அழியாப் புகழ் பெற்று விட்டனர்.

## 2. பாட்டியார் பெற்ற பரிசில்

**ஔ**வை மூதாட்டியாரின் பெயரை இந்நாளில் அறியாத தமிழர் இரார். ஆனால், செய்திகள் பரவ முடியாத அந்தப் பழைய நாளிற்கூட அப்பெருமாட்டி யார் பெயர் தமிழ் நாடு முழுவதும் அறிந்த பெயராகவே இருந்து வந்தது. இப்பெயர் தாங்கிய பெருமாட்டியர் பலர் பல காலத்தில் இருந்திருக்கின்றனர். இங்கு நாம் குறிப்பது சங்க காலம் என்று வழங்கப்படும் காலத்தில் (இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்) வாழ்ந்தவரைப் பற்றியேயாகும். இவரது பெருமை காரணமாகப் பிற்காலத்தில் பலருக்கு ஔவை என்றே பெயரிட்டனர் போலும்! பெயர் வைத்துக்கொண்டவர் அனைவரும் ஔவையாரைப் போலக் கற்றறிவுடையவரும் கவிஞரும் ஆகிவிட முடியுமா? எனவே, பிற்காலத்தில் அப்பெயர்

தாங்கிய பலருள்ளும் சிலரே உண்மையில் கவி பாடும் திறம் பெற்றுத் திகழ்ந்தனர். நல்வழி போன்ற நூல் களை இயற்றிய ஔவையார் ஒருவரும் உண்டு.

சங்க காலத்தில் வாழ்ந்த ஔவை மூதாட்டியார், போக்குவரத்து வாய்ப்பு ஒன்றும் இல்லாத அந்நாளிற் கூடத் தமிழ் நாடு முழுவதையும் சுற்றித் திரிந்துள்ளார். சிற்றரசர், பேரரசர் ஆகிய அனைவருடைய அவைகளி லும் இவர் சென்று வந்துள்ளார்; பலரைப் பற்றியும் பாடியுள்ளார். அகநானூற்றில் நான்கும், குறுந்தொகையில் பதினைந்தும், நற்றிணையில் ஏழும், புறநானூற்றில் முப்பத்து மூன்றும், இவர் பாடிய பாடல்களெனக் காணப் படுகின்றன. சங்க இலக்கியத் தொகுதியாகிய எட்டுத் தொகையில் இவர் பாடல்கள் ஐம்பத்தொன்று அளவால் அதிகமான பாடல்கள் மட்டும் இவருடையன என்பதற் கில்லை; மிகச் சிறந்த கருத்தமைந்தனவும், கற்பனை வளஞ் செறிந்தனவும், உணர்ச்சிப் பெருக்குடையனவும் ஆகும் இவருடைய பாடல்கள்.

தமிழ் நாட்டின் பல பகுதிகளையும் சுற்றித் திரிந்த பாட்டியாருக்குப் பல உண்மைகள் தெரியலாயின. தமிழ் நாட்டில் பல பகுதிகள், நீர் வளம் மிக்கு, வேலி ஆயிரம் கலம் விளையும் இடமாயும் இருந்தன. இவற்றின் எதிர், கல்லையன்றி வேறு ஒன்றும் விளையாத பகுதிகளும் இருந்தன. பெரிய மலைகளும் இந்நாட்டில் உண்டு. இவற்றையெல்லாம் சுற்றி, இவ்விடங்களில் வாழும் மனிதர்களுடனும் பழகிய பாட்டியாருக்கு ஓர் உண்மை தெளிவாயிற்று. வளமுடைய பகுதிகளில் நல்லவர்களும், வளமற்ற பகுதிகளில் பொல்லாதவர்களும் இருப்பார்கள் என்று ஒரு காலத்தில் பாட்டியார் நினைத்தார். வள முடைய பகுதியை நல்ல நாடென்றும். அல்லாத பகுதியை அல்லாத நாடென்றும், கூறினார்கள் மக்கள். இவ் விரண்டும் தவறானவை என்பதைப் பாட்டியார் கண்டு

பிடித்தார், அனுபவமூலமாக. உடனே இக்கருத்தை ஒரு பாடலாகப் பாடினார் :

**'நாடாகு ஒன்றோ, காடாகு ஒன்றோ,**
**அவலாகு ஒன்றோ, மிசையாகு ஒன்றோ,**
**எவ்வழி நல்லவர் ஆடவர் ?**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே !'** (புறம். 187)

'நாடே, நீ நாடாய் இருந்தாலும், காடாய் இருந்தாலும், பள்ளமாய் இருந்தாலும், மேடாய் இருந்தாலும் சரி ! எங்கே நல்லவர்கள் வாழ்கிறார்களோ, அங்கேதான் நீ நல்ல நாடென்று கூறப்படுவாய் !' என்பதே இப்பாடலின் பொருள். இது இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்ப் பாடியதுதான். ஆனாலும், இன்று வரை, ஏன் நாளையுங்கூட, இதனை மறுக்கவோ, இல்லையென்று கூறவோ இயலுமா ? இத்தகைய ஆழ்ந்த கருத்துக்களைச் சிறிய பாடல்கள் மூலம் வெளிப்படுத்தும் பெருமை வாய்ந்தவர் பாட்டியார். பல நாடுகளில் வாழும் பலரிடம் சென்றாலும், **அதியமான் நெடுமான் அஞ்சி** என்ற ஒரு சிற்றரசனிடம் பாட்டியாருக்கு அலாதியான பற்று உண்டு. அவனைப் பற்றித்தான் இவர் பல பாடல்கள் பாடியுள்ளார்.

அதியமான் ஒரு சிறிய நிலப்பரப்பின் அரசனேயாயினும். வள்ளல் தன்மையுடையவன் ; கடையெழு வள்ளல்களுள் ஒருவன் ; பாரி வள்ளலைப் போன்ற பரந்த மனப்பண்பு உடையவன். எனவே, ஔவைப் பாட்டியாருக்கு அச்சிற்றரசன்மேல் தனிப் பற்று ஏற்பட்டது.

பல முறை அவனைக் காணச் சென்றுள்ளார் ஔவையார். ஒரு முறை இவரைக் கண்டவுடன் பரிந்து வந்து பெரிதும் உபசரித்தான் அதியமான். நீண்ட தூரம் நடந்து வந்தமையின், பாட்டியார் மிகவும் களைப்படைந்து காணப்பட்டார். உடனே தன் மடியில் மிகவும்

பாதுகாப்புடன் வைத்திருந்த நெல்லிக்கனியை எடுத்து, 'இதனை உண்க!' எனக் கொடுத்தான் மன்னன். தமிழ் நாட்டில் நெல்லிக் கனிக்குத்தானா பஞ்சம்?

உடனே பாட்டியார் அப்பழத்தை வாங்கி உண்டார்; நன்றாகச் சுவைத்து உண்டார்; நாவைச் சப்புக் கொட்டினார். இவரையும் அறியாமல் ஓர் ஐயம் பிறந்தது. உடனே இவருக்கும் அதியமானுக்கும் இடையே கீழ் வருமாறு ஓர் உரையாடல் நிகழ்ந்தது:

**ஔவை:** அதியா, நீ தந்த பழம் யாது?

**அதியமான்:** ஏன், பாட்டியீர்! நெல்லிப் பழந்தான்! சுவைகூடவா தெரியவில்லை?

**ஔவை:** உலகில் இதுபோல் சுவையைக் கண்டதே இல்லை. அதனாலேதான் சந்தேகப்பட்டுக் கேட்டேன். இது என்ன? சாதாரண நெல்லிப் பழந்தானா?

**அதியமான்:** நெல்லிப்பழந்தான்; ஆனால், சாதாரணப் பழமன்று இது! இப்பழம் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறைதான் பழுக்கும். அதுவும், ஒரே பழந்தான் பழுக்கும். பெரிய இரண்டு மலைகளின் நடுவே உள்ள ஓர் ஆழமான பள்ளத்தில் பழுக்கிறது இது. இதைப் பறிப்பதற்குப் பெரு முயற்சி செய்ய வேண்டும்!

**ஔவை:** அவ்வளவு பாடுபட்டு, ஏனப்பா இதனைப் பறிக்கவேண்டும்? ஊரில் எவ்வளவோ நெல்லிப் பழங்கள் கிடைக்குமே?

**அதியமான்:** கிடைக்கலாம்! ஆனால், இப்பழத்தை உண்பதனால் கிடைக்கும் பயன் அப்பழங்களால் கிடைக்குமா?

**ஔவை:** நெல்லிப்பழம் உடம்புக்கு மிகவும் நன்மை செய்யும். இப்பழமும் அவற்றுள் ஒன்றுதானே?

**அதியமான் :** அன்று அன்று ! இப்பழத்தை உண்டவர்கள் மிக நீண்ட காலம் நோய் நொடியின்றி உயிருடன் வாழ்வர். சுருங்கக் கூறினால்......

**ஔவை :** சொல்லு, சொல்லு ! விரைவிற்கூறு ! சுருங்கக் கூறினால்......

**அதியமான் :** இவ்வுலகிற்குக் கிடைக்கக்கூடிய அமிழ்தமாகும் இது. அமிழ்தம் உண்பவர் அடையும் பயனை இது அடைவிக்கும்.

**ஔவை :** ஆ ! அதியா, நீ என்ன காரியஞ் செய்து விட்டாய் ! இவ்வாறு செய்யலாமா ? இவ்வளவு நன்மை செய்யும் பழத்தை நீயல்லவா உண்ண வேண்டும் ? அரசனாகிய நீ இதனை உண்டு நெடுங்காலம் வாழ்ந்தால், குடிகட்கு நன்மை உண்டாகும். கிழவியாகிய யான் உண்டு யாது பயன் விளையப் போகிறது ?

**அதியமான் :** பாட்டியீர், போனால், எத்தனையோ அரசர்கள் உண்டு இவ்வுலகில். நீங்கள் உயிர் வாழ்வதால் தமிழும் தமிழர்களும் ஒருங்கே வாழ முடியும். ஆதலாலே தான் உங்கட்கு இதனைத் தந்து உண்ணச் செய்தேன்.

**ஔவை :** அதியா, இது என்ன காரியம் ! இதன் தன்மையை என்னிடம் முதலிலேயே கூறியிருந்தால் யான் மறந்துகூட இதனை உண்ணத் துணியேனே ! இன்னது என்று கூறாமல் தந்து என்னை வாழ வைத்தாய் ! ஆம் ! சிவபெருமானைப்போல நீ வாழ்வாயாக !

இம்முறையில் அதியமானுக்கும் ஔவையாருக்கும் உரையாடல் நடைபெறவில்லை : ஒருவேளை நடைபெற்றும் இருக்கலாம். ஆனால், அது பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. இப்பொழுது நாம் அறிவது, ஔவையார் இச்சந்தர்ப்பத்தில் பாடிய பாடல் ஒன்று தான். அப்பாடலிலிருந்து இவ்வள்வு பொருளையும் நாம் அறிதல் கூடும்.

'வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்
களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போரடு திருவில் பொலந்தார் அஞ்சி !
பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீல மணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே ! தொன்னிலைப்
பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறுஇலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்குஈத் தனையே !' (புறம். 91)

[வெற்றி பொருந்திய வாட்படையை ஏந்திப் பகைவரைப் போர்க்களத்தில் வெல்லும் வீரக்கழலை அணிந்த நீண்ட கையையுடைய மதுவை உண்ணும் அதியர் தலைவனே, போரிடும் அழகிய வில்லை ஏந்திய அஞ்சியே, பால் போன்ற பிறைச் சந்திரனை நெற்றியில் கொண்ட நீலகண்டனைப் போன்று நீயும் வாழ்வாயாக ! பழைய பெரிய மலையில் ஆழ்ந்த பள்ளத்தில் சிறிய இலையை உடைய நெல்லிப் பழத்தின் இயல்பைப்பற்றி ஒன்றுங் கூறாமல் உன் மனத்துள் அடக்கிக்கொண்டு, சாவு நீங்க எனக்குத் தந்தாய்.]

இப்பாடலில் காணப்படும் அருமைப்பாட்டை அறிய வேண்டும். தமது வாழ்வை நீடிக்கச் செய்யும் பழத்தை யார்தான் பிறருக்குத் தருவார்? இப்படி யாரேனும் முன்னர்ச் செய்ததுண்டா? உண்டு. ஒருவன் தான் இவ்வாறு செய்தான். சாவையேதரும் என்று அறியப்பட்ட நஞ்சை (விஷத்தை) வேண்டுமென்றே, தான் உண்டான் ஒருவன். ஏன்? அவ்வாறு உண்டு வாழ்வைத் தரும் அமிழ்தத்தைத் தேவர்கட்கு வழங்கினான் அவன்! ஆனால், நிகழ்ந்தது யாது? இதோ சிலப்பதிகார ஆசிரியர் பாடுகிறார் அதுபற்றி :

**'விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்**
**உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்'**

எப்படியாவது வாழ வேண்டும் என்று கருதின தேவர்கள், அமுதை உண்டும் இறந்தார்கள். ஆனால், அவர்களை வாழவைப்பதற்காக இறைவன் விடத்தை உண்டான். என்ன அதிசயம்! அவன் சாகவில்லை; 'நீலகண்டன்' என்ற பெயருடன் வாழ்கிறான்.

அதியமான் சிறந்த நெல்லிப் பழத்தைத் தான் உண்ணாமல் பாட்டியாருக்கு வழங்கிய செயல் சிவபெருமானுடைய செயலை நினைவூட்டியது. ஆதலால், 'அந்த நீலகண்டன் போலவே நீயும் வாழ்வாயாக!' என்று பாட்டியார் மனங்குளிர அவனை வாழ்த்துகிறார். **'நீல மணி மிடற்று ஒருவன் போல மன்னுக!'** என்ற இவருடைய வாழ்த்து, உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து நன்றியுடன் வெளி வருவது நன்கு தெரிகிறது இக்கவிதையில்.

# 3. பெண் தூதுவர்

இந்திய நாட்டின் அருமைப் புதல்விகளுள் ஒருவராகிய விஜயலக்ஷ்மி பண்டிதையார் இந்திய நாட்டின் தூதுவராய் இரஷ்ய நாட்டிற்கும், அமெரிக்க நாட்டிற்கும், இங்கிலாந்து நாட்டிற்கும் சென்றதைக் கண்டு இந் நாட்டில்— ஏன்?— வேற்று நாட்டிலுங்கூட— பலர் வியந்தனர். இதுவரை பிறநாட்டார் செய்யாத செயல் என்று கூறினர். அவர்களுடைய நாடுகளைப் பொறுத்த வரை இது புதுமையாய் இருக்கலாம். இந்தியாவிற்குக் கூடத் தமிழ்நாடு அல்லாத பிற பகுதிகட்கு இது புதுமை யாய்த் தோன்றலாம். ஆனால், தமிழர்கட்கு இச்செயல் புதுமையன்று. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இத்தமிழ் நாட்டில் ஒரு பெண்ணை ஒரு மன்னன் மற்றொரு மன்னனிடம் தூது அனுப்பினான்.

ஒரு நாட்டின் அல்லது மன்னனின் தூதாகப் பிற நாடு செல்வது அவ்வளவு எளிதானதன்று. சாதாரண காலங்களிற் கூடத் தூது செல்லலாம். ஆனால், போர் நிகழக் கூடிய அறிகுறிகள் தோன்றும் பொழுது தூது செல்லல் மிக மிகத் தொல்லை தருவது ஒன்று. அரசியல் வகுத்த வள்ளுவப் பெருந்தகையார் 'தூது' என்று ஓர் அதிகாரமே வகுத்துள்ளார் என்றால், அதன் பெருமையை எவ்வாறு கூறுவது ! தூது செல்வார்க்கு இன்றியமையாதன என மூன்று இயல்புகளைக் குறள் குறிக்கின்றது.

**'அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுஉரைப்பார்க்கு**
**இன்றி யமையாத மூன்று.** (குறள்-682)

என்ற குறளில் எவ்வளவு பொருளாழம் தோன்றுகிறது ! அன்பு வேண்டும் தூதுவருக்கு. ஆனால், யாரிடம் அன்பு தேவை ? தம் அரசனிடம் அன்பு வேண்டும். 'இதனை ஒரு பெரிய காரியமாக வள்ளுவர் கூற வேண்டுமா ?' என்று கூட நினைக்கத் தோன்றும். ஆனால், இந்நாட்களில் சில நாட்டின் தூதுவர்கள் திடீரென மறைந்து விடுகிறார்கள் ; பின்னர் மற்றொரு நாட்டில் தஞ்சம் புகுந்துவிடுகிறார்கள் ; இன்னுங் கூறப்போனால், சில மறைபொருளான கடிதம் முதலியவற்றையும் உடன் கொண்டு சென்று விடுகிறார்கள். இந்நாளில் இவ்வாறு செய்யும் தூதுவர் செயல் சரியா என்ற ஆராய்ச்சி இவண் தேவையில்லை. ஆனால், தூதுவருக்குத் தம் அரசனிடம் அன்பு வேண்டும் என்று கூறிய வள்ளுவர் வார்த்தை எவ்வளவு தீர்க்க தரிசனத்துடன் கூறப்பட்டது என்பதை அறியலாம்.

நிறைந்த அன்பு உடையார் மட்டும் தூதுவராய் இருந்து பயனில்லை. அறிவு கலவாத அன்பு தீமையே விளைக்கும். அதுவும் தம் அரசனுக்கு எப்பொழுது தேவை என்பதை அறியும் அறிவாக இருத்தல் வேண்டும். இவ்வறிவு இருத்தலைவிட, அன்புடைமை இன்றியமை

யாததாகலின், அதனை முதலிலும் இதனை அடுத்தும் குறள் கூறுகிறது. காரணம் யாது? அறிவு குறைந்த அன்பு மட்டும் உடையார், தாமாக ஒன்றைச் செய்ய முடியாது. ஆனால், எடுத்துக் கூறியதைச் சென்று கூறி விடுவார். அறிவிருந்து அன்பில்லாதவர் வேண்டும் என்றே தீமையை விளைக்கப் பின் வாங்கமாட்டார். ஆதலாலேதான், 'அன்பு முதலிலும் அறிவு இரண்டாவதாகவும்' இடம் பெற்றன.

மூன்றாவதாக உள்ளது சொல்வன்மை. எத்துணை அன்பும் அறிவும் இருப்பினும், தூதுவனுடைய செயல் வேற்று மன்னனிடம் எடுத்துக் கூறவேண்டிய செய லன்றோ? எனவே, சொல் வன்மை மூன்றாம் இடத்தைப் பெறுகிறது. தம் சொல் வன்மை காரணமாகப் பகை யுடைய இருவரைச் சேர்த்து வைக்கவும் கூடும். சொல் வன்மை இன்மையாலும், தவறான வழிப் பயன்படுத்து முகத்தாலும் நட்புடைய இருவரைப் பிரித்துவிடவும் கூடும். ஆதலால், வெறுஞ் சொல் வன்மை என்று கூறாமல், 'ஆராய்ந்த சொல்வன்மை' என்று குறள் குறிக்கிறது. தூது உரைக்கப்படும் மன்னன் மனநிலை அறிந்து பேச வேண்டும். 'ஆடிக் கறக்கும் மாட்டை ஆடியும் பாடிக் கறக்கும் மாட்டைப் பாடியும்கறத்தல் வேண்டும்.' என்பது தமிழ்நாட்டில் வழங்கும் பழமொழி. எனவே, எத்தகைய சொல்லை எந்த நேரத்தில் கூற வேண்டும் என்பது ஆராய்ச்சியின் பாற்பட்டது. அங்ஙனம் ஆராய்ந்து சொற்களைப் பயன்படுத்துகையில் வன்மை யுடன் பயன்படுத்த வேண்டும்.

இம்மூன்றையுமடுத்து இன்னும் பல இயல்புகளைக் குறள் குறிக்கின்றது. அவற்றுள் ஒரு குறளை மட்டும் கண்டு மேலே செல்லலாம்:

'தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.' (குறள். 685)

'வேற்றரசனுக்குப் பல காரியங்களைச் சொல்லும் வழி காரண வகையால் தொகுத்துச் சொல்லியும், இன்னாத காரியங்களைச் சொல்லும் பொழுது கடுமையான சொற்களை நீக்கி, இனிய சொற்களால் அவன் மனமகிழச் சொல்லியும், தம்மரசனுக்கு நன்மை பயப்பவரே நல்ல தூதுவராவர்,' என்பதே இக்குறளின் பொருள்.

சிலர், விரிவாக எடுத்துப் பேசிய வழி உடம்படுவர். மற்றும் சிலர், காரண காரியங்களை எடுத்து விவாதித்துக் கூறிய வழி ஏற்றுக் கொள்வர். சிலர் சுருங்கக் கூறுவதை ஏற்பர். மற்றுஞ் சிலர், சிரிக்கப் பேசுகின்ற காரணத்தால் சொல்வதை ஏற்றுக் கொள்வர். இவை அனைத்தையும் அறிந்து பேசுபவனே சிறந்த தூதுவன் என்கிறார் வள்ளுவர். இவ்விலக்கணமெல்லாம் ஆண்பாலில் கூறப் பெற்றிருப்பது உண்மைதான். எனினும், இரண்டு பாலுக்கும் ஏற்பனவாகவே இவற்றைக் கொள்ள வேண்டும்.

மேலே கூறிய அனைத்திலக்கணங்களும் பொருந்திய பெண் தூதுவர் ஒருவர் உண்டென்றால், வியப்படையாமல் இருக்க முடியாது. அதுவும் அவ்வளவு பழைய நாளில் இருந்தார் என்றால், அவர் யார் என்று கேட்கத் தோன்றுகிறதா? யாராய் இருத்தல் கூடும்? ஔவையாரேதான். ஔவையார் தம் நண்பனான அதியமானுக்காகத் தூது சென்றார்.

அதியமான் அஞ்சி, சிறந்த வள்ளல்; கடையெழு வள்ளல்களுள் ஒருவன். என்றாலும், நம்மைப் போன்ற மக்கள் நடுவேதான் அவன் வாழ நேரிட்டது. அது அவனுடைய குறையன்று. ஆனால், அதனால் விளைந்த பயனை அவனும் அனுபவிக்க நேரிட்டது. தன்னிகரில்லாத பாரி வள்ளலின் கதி என்னவாயிற்று? பாரி வஞ்சகமாகக் கொல்லப்பட்டான்! அதுவும் அறத்தைக் காக்கப் பிறந்த மூவேந்தரால் கொல்லப்பட்டான்!

இவ்வுலகம் தோன்றிய நாளிலிருந்தே இந்நிலைதான் இருந்து வந்துளது; வருகிறது. மிக நல்லவர்கட்கு இவ்வுலகம் தரும் பரிசில் யாது? விஷம், சிலுவை, கல், துப்பாக்கிக் குண்டு என்பவைகளே அப்பரிசுகள். சாக்கரட்டீஸுக்கு விஷமும், ஏசுநாதருக்குச் சிலுவையும், நபிகட்குக் கல்லும், காந்திக்குக் குண்டும் தந்த உலகம் இது! மகாத்துமா இறந்தவுடன் பேரறிஞர் 'பர்னாட்ஷா' கூறியது நினைவுக்கு வருகிறது. 'அளவு மீறி நல்லவராய் இருப்பது எவ்வளவு ஆபத்தானது!' என்பனவே அம்மேதை கூறிய சொற்கள்!

முல்லைக் கொடிக்குத் தான் ஏறி வந்த தேரை நிறுத்திச் சென்ற பாரியையுங்கூட வஞ்சகமாகக் கொல்ல அஞ்சாத மக்கள் நிரம்பிய உலகமன்றோ இது! அதியமானாகிய வள்ளல், பிறருடன் வீணாகப் போருக்குப் போகிறவன் அல்லன். அவனாகப் போருக்குப் போகாவிடினும், இவ்வுலகம் அவனைச் சும்மா இருக்கவிடவில்லை! தொண்டைமான் என்ற மற்றொரு சிற்றரசன் வாழ்ந்தான் அதியன் காலத்தில்; தானும் ஒரு சிற்றரசனேயாயினும், கொஞ்சம் படை சேர்த்துக்கொண்டு அதியமானிடம் போருக்குத் தயாராகிவிட்டான். தொண்டைமான் போருக்கு மார் தட்டிய நேரத்தில் அதியன் கை தாழ்ந்திருந்தது.

அதற்கு முன்னர்த்தான் மற்றொரு போர் செய்து அதியன் மிகவும் களைப்படைந்திருந்தானாகலின், தொண்டைமானுடன் போர் தொடுக்கும் நிலையில் இல்லை அவன். ஆனால், அவனாகப் போருக்கு எழவில்லையே! தானாக வரும் போரை எவ்வாறு தடுப்பது? பல முறை ஆராய்ந்து பார்த்தான் அதியன். யாரையேனும் சமாதானத் தூதாக அனுப்பலாம் என்ற முடிவுக்கு வந்தான். செல்கிறவர் அவனுடைய மதிப்பைக் குறைக்காமலும் பேச வேண்டும்; போரையும் நிறுத்த முயல

வேண்டும். இவ்விரண்டையும் செய்ய வல்ல தூதுவன் யார் என்று பலகாலும் ஆய்ந்த அதியமானுக்கு, நல்ல காலத்தின் அடையாளமாக ஔவையார் உடன் இருந்தார்.

அவனுக்காகத் தொண்டைமானிடம் தூது செல்லத் துணிந்தார் இப்பெருமாட்டியார். வள்ளுவர் குறளுக்கு முற்றிலும் இலக்கியமாய் அமையக்கூடிய பண்பாடுடையவர் ஔவையார். இவர் தொண்டைமானிடம் சென்றார். படை சேர்த்து வைத்துள்ள செருக்குடன் இருந்தான் தொண்டைமான்; பாட்டியாரைக் கண்டவுடன் மிகுந்த உபசரிப்புச் செய்து, தன் படைக்கலச் சாலையை முழுவதும் சுற்றிக் காட்டினான். பாட்டியார் இதனைக் கண்டு அஞ்சி, அதியமானை மன்னிக்கும்படி வேண்டுவார் என்று கனவு கண்டான் தொண்டைமான். முழுவதையும் சுற்றிப்பார்த்து வந்த அதியன் தூதுவரான பாட்டியார் தம் கருத்தை ஒரு பாடலாகப் பாடினார். அப்பாடலில் அவருடைய அன்பும், அறிவும், ஆராய்ந்த சொல் வன்மையும், தொகுத்துக் கூறும் அழகும், சிரிக்கப் பேசும் இயல்பும் நன்கு விளங்குகின்றன.

'ஐயனே, இங்கு உன் படைக்கலச் சாலையில் ஆயுதங்கள் அனைத்தும் பளபளப்புடன் மயிற்பீலி சூட்டப்பட்டு, மலர்மாலை அணியப்பட்டு, வலிய பிடிகள் போடப்பட்டுத் துருப் பிடியாமல் நெய் பூசப்பட்டு உள்ளன; மிகவும் பாதுகாவலான இடத்தில் உள்ளன. அதியமானிடம் உள்ள படைக்கலங்கள் பகைவரைக் குத்தி நுனி உடைந்து அனைத்தும் சாணை பிடிக்கக் கொல்லன் உலைக்களத்தில் கிடக்கின்றன. அதியன் யார் தெரியுமா? தன்னிடம் இருப்பின் பலருக்குங் கொடுத்து உதவுபவன். இல்லையாயின், பலருடனும் சேர்ந்து உள்ளதைப் பகிர்ந்து உண்பவன்!'' என்ற கருத்தமையப் பாடினார் அதியன் தூதுவர்.

'இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்தி நெய்அணிந்து
கடியுடை வியல்நக ரவ்வே; அவ்வே,
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொல்துறைக் குற்றில மாதோ! என்றும்
உண்டாயின் பதங்கொடுத்து
இல்லாயின் உடனுண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணல்எங் கோமான் வைந்நுதி வேலே!'

(புறம். 95)

[இவ்வே—இவைகள், கண் திரள் நோன் காழ்—உடல் திரண்ட வலிய காம்பு, கடியுடை வியல் நகர்-பாது காவலுடைய அகன்ற இடம், அவ்வே-அவைகள், குற்றில-சிறிய உலைக்களத்திலுள்ளவை, பதம்-உணவு, ஒக்கல்-சுற்றம்]

இத்தகைய அறிவுடைய தூதுவர் பாடலில் எத்துணைச் சிறப்புக்கள் காண்கின்றன! முதல் மூன்றடிகள் மூலம் தொண்டைமானுடைய படைச் சாலையைப் புகழ்வது போலப் பேசினார் புலவர். அவன் மகிழ்ந்தான். ஆனால், அவன் முன்பின் போர் செய்து அறியாதவன் என்பது அச்சொற்களின் உட்கருத்து அடுத்த இருஅடிகள் அதியமானையும், அவன் படைக்கலங்களையும் பழிப்பன போல உள்ளன. ஆனால், ஓயாது போர் செய்து வெற்றிபெறும் வீரன் அவன் என்பதும் குறிப்பால் பெற வைத்தார் புலவர்; பிற்பகுதியில் அவன் வள்ளல் தன்மையையும், பிறருக்குத் தீங்கு நினையாதவன் அதியமான் என்பதனையும், அவன் அதிகாரச் செருக்கு அற்றவன் என்பதனையும் கூறிவிட்டார்; அவனிடம் போருக்குப் போவதே பெரிய பாவம் என்பதைக் குறிப்பாகக் கூறிவிட்டார். பாடலால் அதியன் மதிப்பு உயர்ந்தது; தொண்டைமான் செருக்கு அடங்கியது. அம்மட்டோ! போரும் நின்றுவிட்டது.

தமிழகம் பெற்ற ஒப்பற்ற பெண்டிர், இலக்கியம் மறக்க முடியாத இவ்வொரு தூதுவர், பாடலால் இவ்வனைத்தையும் செய்துவிட்டார்.

## 4. வீரம் பாடிய மகளிர்

சங்கப் பாடல்கள் என வழங்கப் பெறுபவை பத்துப்பாட்டும், எட்டுத்தொகையுமாம். பத்துப்பாட்டு என்னும் நூலுள், மிகவும் நீண்ட பாடல்களாகத் திருமுருகாற்றுப்படை முதலாக, மலைபடு கடாம் ஈறாகப் பத்துப் பாடல்கள் உள்ளன. சிறிய அளவுடைய உதிரியான பாடல்களை, ஓர் இனம் பற்றித் தொகுத்த தொகுப்புக் களே எட்டுத்தொகை எனப்பெறும். புறநானூறு, அகநானூறு குறுந்தொகை முதலிய எட்டு நூல்கள் இப்பெயர் பெற்றன. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற இத்தொகுப்புக் களில் பாடிய புலவர்கள் மொத்தம் 473 பேர். இவற்றை யல்லாமல் 102 பாடல்கட்கு ஆசிரியர் பெயர் காணப்பட வில்லை.

பெயர் தெரியும் 473 புலவர்களுள், 30 பேர் பெண் பாற்புலவர். அனைவரும் பாடிய சிறியவும் பெரியவுமான பாடல்கள் 2381. இத்தொகையுள் முப்பது மகளிரும் பாடிய 190 பாடல்களும் அடங்கும். இம்முப்பது மகளிருள் ஔவையாரே மிகுதியும் பாடியவர். அவர் பாடிய 59 பாடல்கள் எதிரே ஒரே ஒரு பாடல் பாடிய 16 மகளிரும் உள்ளனர். ஒரே ஒரு பாடல் பாடியதன் மூலம் கால வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்படாமல் நிலைத்துவிட்டனர் இப்பதினாறு பெண்பாற்புலவரும். அளவால் ஒரு பாடலாய் இருக்கலாம்; ஆனால், சிறப்பால் கணக்கிடும் பொழுது, இப்பாடல்கள் மதிப்பிட முடியாத பெருமை உடையனவாகின்றன.

இம்மகளிருள் பலரும் வீரத்தைப் புகழ்ந்து பாடியுள்ளனர். ஆடவர், வீரத்தைப் பாடுவதற்கும், இப் பெண்டிர் பாடுவதற்கும் ஒரு வேற்றுமையைக் காணலாம். இவர்கள் பாடிய பாடல்களில் பெண்கள் என்ற முத்திரை பளிச்சிட்டுத் தோன்றும்.

வீரம் என்றவுடன் வில்லும் வேலும் வாளும் தாங்கிப் போர்க்களம் புகுந்து, பகைவரை வெட்டிச் சாய்க்கின்ற மன நிலைதான் நம் நினைவிற்கு வருகின்றது. இதுவும் வீரந்தான் என்பதில் ஐயமில்லை. ஆனால், இத்தகைய வீரரை உண்டாக்குபவர்களின் மேல் நம் கவனம் செல்வதில்லை. ஆம்! கண்ணெதிரே காண்பதை மட்டும் நினைவிற்கொண்டு புகழ்வதும், காணப்படாமல் மறைந்து நிற்கும் வேரை மறந்து போவதும் உலகியற்கை தான். ஆனால், பழம் பழுக்கும் மரத்தைப் பார்க்கும் ஒரு சிலர் மட்டும் அம்மரத்தின் சிறப்பைப் புகழ்வதோடு அமைவதில்லை; மரத்தின் சிறப்புக்குக் காரணமான வேரையும் நினைவுகூர்ந்து சிறப்புச் செய்வர். அதே போலப் போர்க் களத்தில் வீரம் காட்டும் வீரரை மட்டுமே புகழும் இவ்வுலகில், அவ்வீரரின் மூல காரணத்தை அறிந்து புகழும் சிலரும் இல்லாமல் இல்லை.

உரோம சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சி (Decline and Fall of the Roman Empire) என்ற தம் பெருநூலில் அந் நாட்டின் வீழ்ச்சிக்குக் காரணங்களை ஆய்கிறார் எட்வர்டு கிப்பன் என்ற அதன் ஆசிரியர். மிகப்பெரிய காரணங்களுள் ஒன்றாகப் பெண்களின் மன மாறுபாட்டைக் கூறுகிறார். 'முன்னர் உரோமாபுரிப் பெண்டிர், எப்பொழுதும் வீரரையே தியானித்துக்கொண்டு வீர வழிபாடு செய்வாராயினர். தம்முடைய படுக்கை அறைகளிலும் வீரர்களுடைய படங்களையே வைத்துக்கொண்டு, உறங்கு முன்னரும் விழித்த பின்னரும் அப்படங்களையே பார்த்து வரலாயினர். ஆதலின், எப்பொழுதும் வீரர்கள் பற்றிய வரலாறுகளே அவர்கள் மனத்தில் நிறைந்

திருந்தன. அவ்வாறு உள்ளவரை உரோம நாட்டில் பெருவீரர்கள் பிறந்தார்கள். நாளாவட்டத்தில் இந்நிலை மாறியது. குடியிலும் களியாட்டத்திலும் அப்பெண்கள் மனத்தைச் செலுத்தி, இன்ப வேட்டையில் இறங்கினார்கள். அந்நிலைமை வந்தவுடன் வீரர்கள் தோன்றுவது அருகிப் போயிற்று!' என அவர் கூறுவது, தமிழ் நாட்டைப் பொறுத்தவரை முற்றிலும் உண்மையா யிருந்தது.

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்கள், உடல் வீரமும் மன வீரமும் ஒருங்கே படைத்தவர்களாய் இருந்தார்கள். அவ்வாறு அவர்கள் தோன்ற வேண்டுமாயின், அதற்குரிய காரணம் யாதாக இருத்தல் கூடும்? அவ்வீரர்களைப் பெற்றெடுத்த தாய்மார்களும் வீரம் மிக்கவர்களாயிருந் திருத்தல் வேண்டும். இவ்வுண்மையைப் பலரும் அறிந் திருந்தனர். எனினும், சமயம் நேரும் பொழுது ஒரு சிலர் மட்டும் வீரர்களைப் புகழ்வதோடன்றி, அத்தாய்மார் களையும் புகழ்ந்து கூறினர். வீரரைப் பெற்றெடுத்த வீரம் மிக்க பெண் மக்களை, 'மூதில் மகளிர்' என்று வழங்கினர். மூதில் மகளிர் என்ற சொல் தொடருக்குப் பழைய வீரக் (மறக்) குடியில் பிறந்த பெண்டிர் என்பது பொருளாகும்.

மறக்குடியை 'மூதில்' என்பது பழைய மரபு. மூதில் என்பதற்குப் பழைய குடி என்பது பொருள். கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தேகூட, வாளோடு முன் தோன்றி மூத்த குடியினர் ஆகலின், இக்குடியினைப் பழைய குடி (மூதில்) எனக் கூறினர்.

வீரர்களைப் பாடிய பாடல்களின் இடையே, வீரர் களைப் பெற்ற தாய்மார்களை நினைந்து பாடிய பாடல் களும் உண்டு என்று கூறினோம். யார் அவ்வாறு நினைந்து கூறிய பெருமக்கள் என்று கேட்கத் தோன்று கிறதா? வேறு யாராக இருத்தல் கூடும்? அவர்களும் பெண்களே!

**காக்கை பாடினியார் நச்செள்ளையார்** என்பவர் ஒரு பெண்பாற்புலவர். நச்செள்ளையார் என்பதே அவரது இயற்பெயர். அவரது அருமையான பாடல் ஒன்றில் காக்கையைப் பற்றிப் பாடினது காரணமாகக் காக்கை பாடினியார் என வழங்கப்பட்டார் என்பது தெரிகிறது.

பொருள் தேட வெளியூர் சென்ற தலைவன், நீண்ட காலம் வாராமல் இருந்தான். தலைவி பெரிதும் வருந்து வாளாயினாள்; தினமும் வழிமேல் விழி வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஒரு நாள் அவள் வீட்டு முற்றத்தில் காக்கையொன்று ஓயாமல் கரைந்தது. 'காக்கை கரைந்தால் விருந்து வரும்,' என்று கூறுவர். அதே போல, அன்று தலைவன் மீண்டுவிட்டான். எனவே, அவன் வரவை முன் கூட்டி அறிவித்த காக்கைக்கு விருந்து செய்ய வேண்டும் என்று தலைவி தோழியை நோக்கிக் கூறியதாக அமைந்துள்ளது பாடல். 'ஊரில் உள்ள மாடுகள் அனைத்தும் கறந்த பாலில் நெய் எடுத்து, அந்நெய்யில் தொண்டி என்ற ஊரில் விளைந்த அவ்வளவு அரிசியையும் சோறாக்கி, இக்காக்கைக்கு இட்டாலும் போதாது!' என்ற பொருளில் பாடல் அமைந்துள்ளது.

**'திண்தேர் நள்ளி கானத்து அண்டர்**
**பல்லாப் பயந்த நெய்யில் தொண்டி**
**முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு**
**எழுகலத்து ஏந்தினும் சிறிதுஎன் தோழி!**
**பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு**
**விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே.'**

(குறுந். 210)

இவ்வழகிய பாடலில் காக்கையைப் பாடியமையின், அவர் காக்கை பாடினியார் எனக் கூறப்பட்டார். இத்தகைய பெருமாட்டியாரே வீரக் குடியிற் பிறந்த பெண் ஒருத்தியைப் பற்றிப் பாடியுள்ளார்.

முன்னர்க் கூறப்பட்ட மறக்குடிப் பிறந்த கிழவி ஒருத்தி. அவள் உடம்பு, வயது காரணமாக இளைத்

துள்ளது. நரம்புகள் தடித்து மேலெழுந்து காணப்படு கின்றன. தோள்கள் தளர்ந்துள்ளன. அவள் முட்செடி போன்றுள்ள இடையினையுடையாள். அத்தகைய கிழவிக்கு ஒரே ஒரு மகன் இருந்தான். ஆம்! 'இருந்தான்' என்றுதான் கூற வேண்டும். இப்பொழுது அவன் போருக்குச் சென்று இறந்து விட்டான். போர்க்களத் திலிருந்து மீண்ட சிலர், கிழவியிடம் பேசினர். சரியாக அறிய மாட்டாத அவர்கள், அவளுடைய மைந்தன் தன் முதுகில் புண்பட்டு இறந்தான் என்று கூறிவிட்டார்கள். தன் மகன் முதுகில் புண்பட்டான் என்றால், போரில் புறங்காட்டி ஓடினான் என்பதுதானே பொருள்? வீரக் குடியிற் பிறந்த கிழவிக்குத் தன் மகன் செய்த இந்த இழிந்த செயல் பொறுக்கக் கூடியதா? உடனே சீறி எழுந்தாள். என்ன கூறி விட்டுச் சென்றாள், தெரியுமா? 'என் மகன் உண்மையில் புறமுதுகிற் புண்பட்டு இறந்திருப்பின், அவ னுக்குப் பால் கொடுத்த என் மார்பை அறுத்து விடுகிறேன்!' என்று சபதம் செய்து புறப்பட்டாள்.

போர்க்களத்தில் கிடந்த உடல்களை எல்லாம் புரட்டி னாள்; தன் மகன் உடலத்தைக் கண்டாள். என்ன புதுமை! அவன் மார்பில் பட்ட காயத்துடன் இறந்து கிடந்தான். அவ்வீரத் தாய், அது கண்டு மகிழ்ந்தாளாம். எவ்வாறு? பெற்ற பொழுதைக் காட்டிலும் அதிகம் மகிழ்ந்தாளாம்.

'நரம்புஎழுந்து உலறிய நிரம்பா மென்தோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படைஅழிந்து மாறினன் என்றுபலர் கூற,
'மண்டுஅமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்டஎன்
முலைஅறுத் திடுவன் யான்!' எனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ,
ஈன்ற ஞான்றினும் பெரிதுஉவந் தனளே!'

(புறம். 278)

[படை அழிந்து மாறினன் - முதுகு காட்டி ஓடி இறந்தான், சினைஇ- கோபித்து, படுபிணம் பெயரா- இறந்த உடல்களைப் புரட்டி, செங்களம் துழவுவோள்- போர்க்களத்தில் தேடுபவள்.]

இனி ஒக்கூர் மாசாத்தியார் என்ற பெண்பாற் புலவர் மற்றொரு மறக்குடி மகள் பற்றிப் பாடுகிறார்.

'இப்பெண்ணின் தைரியம் மிகவும் கடுமையானது! இவளே மறக்குடியிற் பிறந்தவள் என்று கூறத் தக்கவள். அன்றொரு நாள் நடைபெற்ற போருக்குச் சென்ற இவள் அண்ணன், யானையைக் கொன்று தானும் இறந்தான். நேற்றைப் போரில் இவள் கணவன், பெரிய படையொன்றைத் தடுத்து நிறுத்தித் தானும் இறந்தான். இன்றும் போர்ப் பறை கேட்டது. ஒரே இளைய மகனை உடையவள் இவள். கணவன் இறந்துவிட்டமையின், இனி இவளுக்கு வாழ்வே இல்லை. எனினும், அந்த மகனை அழைத்து, வெள்ளிய உடை ஒன்றை விரித்து உடுத்தினாள்; அவன் பறட்டைத் தலையை எண்ணெய் தடவிச் சீவினாள்; அவன் கையில் வேலைக் கொடுத்துப் 'போர்க்களம்செல்க!' என அனுப்பிவிட்டாள்,' என்ற பொருளில் அமைந்துள்ளது பாடல்.

'கெடுக சிந்தை! கடிதுஇவள் துணிவே!
மூதில் மகளிர் ஆதல் தகுமே!
மேனாள் உற்ற செருவிற்கு இவள்தன் ஐ
யானை எறிந்து களத்தொழிந் தனனே!
நெருநல் உற்ற செருவிற்குஇவள் கொழுநன்
பெருநிரை விலங்கி ஆண்டுப்பட் டனனே!
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்,
'செருமுகம் நோக்கிச் செல்க!' என விடுமே!
(புறம். 279)

இப்பாடல்கள் மகளிராற் பாடப்பட்டவைகளே. இத்தகைய பாடல்கள் புறநானூற்றில் உண்டு. பிற பெண்களின் வீரம் பற்றிய பாடல்கள் தாம் இவை. எனினும், இப்பாடல்களின் அடித்தளத்தில் காணப்பெறும் ஆழ்ந்த அவலச் சுவையை (சோக ரசத்தை) யாரும் அறியா மற்போக முடியாது. வீரத்தையும் வீர மகளிரையும் புகழும் பாடல்களாயினும், போரால் விளையும் மாற் றொணாத் துயரத்தை இப்பாடல்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன. மகனை இழந்து வருந்தும் ஒரு தாயின் துயரத்தை மற்றொரு பெண்தான் அறிய முடியுமே தவிர, ஆண் மகன் அறிவதும் கடினம் : அறிந்தாலும், அதனை உணர்ச்சி மிக்க கவிதையில் வடிப்பது அதைவிடக் கடினம்.

முதற்பாடலின் கடைசி அடியை மற்றொரு முறை படித்துப் பாருங்கள். 'பெற்றநாளைக் காட்டிலும் பெரு மகிழ்ச்சியடைந்தாள்,' என்ற அடியில் வரும் சொல் 'உவந்தனள்' என்பதுதான். ஆனால், அச்சொல் கதறி யழுதாள் என்ற குறிப்பைத் தருவது போலுள்ளது. இரண் டாம் பாடலின் 'இன்றும்' என்ற சொல்லில் உள்ள 'உம்' மைக் கவனியுங்கள். அன்றியும், 'ஒரு மகன் அல்லது இல் லோன்' என்பதில் தொனிக்கும் அவலச் சுவையை உணர்ந்து பார்த்தால் உண்மை விளங்கும் !

## 5. கடமை பாடிய மகளிர்

உலகில் மனிதன் தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் கழித்தே கூட்டம் கூடி வாழக் கற்றுக் கொண்டான். தனி மனிதனாய் வாழ்ந்த பொழுது இல்லாத பல கடமைகள் இப்போது தோன்றலாயின. கடமை என்பது யாது? செய்து தீரவேண்டிய இன்றியமையாமை உடைய செயலே கடமை என்ற பெயரினுள் அடங்கும். சமுதாயமாக

மனிதன் வாழத் தொடங்கியவுடன், தன் கடமைகள் பல்கிவிட்டதைக் கண்டான். இக்கடமைகளுள் பல அவனுடைய நலத்தைக் குறைப்பனவாகவே இருந்தன. தனி மனிதனாய் வாழ்ந்த பொழுது இருந்த உரிமை சமுதாய வாழ்வில் அடிபட்டுப் போயிற்று. சமுதாய வாழ்வில் பலர் ஒன்று கூடி வாழும் வாழ்வில் இன்பம் இருந்தது உண்மைதான். ஆனால், அந்த இன்பத்தைப் பெற அவன் கொடுக்க வேண்டிய விலையும் பெரிதாகவே இருந்தது.

சமுதாய வாழ்வில் பெற்ற இன்பம், பாதுகாவல் என்ற இரண்டிற்கும் தனி மனிதன் தந்த விலை யாது? அவன் உரிமைகளைப் பறி கொடுத்ததே அதன் விலை என்று கூறலாம்.

பிறந்த அனைவருக்கும் வாழ உரிமையுண்டு. இறைவனால் படைக்கப்பட்ட உயிர்கள் எவ்வளவு காலம் வாழ உரிமையுண்டோ, அவ்வளவு காலம் வாழ்ந்து காலம் வரும் போது இறத்தல்தான் முறை. வாழும் காலத்து யாரும் சாவை விரும்பி ஏற்க வேண்டிய இன்றியமையாமை இல்லை. இடையில் ஒரு வேளை இறக்க நேர்ந்தால் அதனைக் கூடுமான வரை தடை செய்ய முயல்வதிலும் தவறில்லை அவ்வாறு இருக்க, ஒருவன் போர்க்குப் புறப் படுவது எவ்வாறு? போர் என்று கூறினால் சாவும் உடன் வருவதுதானே? போருக்குப் போய் மீண்டும் உயிருடன் வருவோம் என்ற உறுதி இல்லையே! அவ்வாறாயின், பலர் போர் என்றவுடன் மார் தட்டி எழுவதன் காரணம் யாது?

இந்தக் காரணத்தை அறியச் சில அடிப்படைகள் அறியப்பட வேண்டும். போர் ஏன் நிகழ்கிறது? ஒருவன் தன் நாட்டின்மேல் படை எடுத்து வரும்போது, நாட்டைக் காக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. அன்றேல், தன்னுடைய மன்னவன் பிற நாட்டின்மேல் படை

கொண்டு செல்லும் போது அவனுடன் செல்ல வேண்டியுள்ளது. இவ்விரு நிலைமையிலும் வீரனுக்குப் போர் புரிய வேண்டிய இன்றியமையாமை ஏற்படுகின்றது. சுருங்கக் கூறின், இதனையே கடமை என்று குறிப்பிடுகிறோம். போர் புரிவது வீரன் கடமை. இக்கடமை நிறைவேற்றத்தில் அவனுடைய அரிய உயிரை இழக்க நேரிட்டாலும் நேரிடலாம். அதை நன்கு அறிந்தே அவன் தன் கடமையைச் செய்யச் செல்கிறான். இது போலவே பிற கடமைகளையும் மனிதன் மேற்கொள்ளுகிறான்.

சமுதாய வாழ்வு பெருகப் பெருக மனிதனுடைய கடமைகளும் விரிந்துகொண்டே செல்கின்றன தனி மனிதன் உரிமைகளில் சிலவற்றை விட்டுக் கொடுக்க நேரிடுகிறது.

கடமையின் சிறப்பையும், சமுதாய வாழ்விற்கு அது எத்துணை இன்றியமையாதது என்பதையும் கண்டோம். இக்கடமைபற்றிப் பழங்காலப் பெண்மணி ஒருத்தி பாடும் பாடலைக் கண்டோம். தாய், தந்தை, தொழிலாளி, மன்னன், தனி மனிதன் அனைவருக்கும் ஒரே பாடலில் கடமைகள் வகுக்கிறார் அம்மாதரசி.

ஒருவன் இளங்குழந்தையாய்ப் பிறந்து வளர்கின்ற பொழுது எத்துணைப் பேருடைய உதவி தேவையாகிறது! குழந்தைப் பேறு இன்பம் பயப்பதாயினும், அதற்கு ஒரு தாய் படும் பாட்டை நினைக்கும் பொழுது கல் நெஞ்சமும் கரையத்தான் செய்கிறது.

மூன்று புவனத்து உள்ள பொருள் முற்றும் கொடுத்து முறை முறையே என்றும் வழிபாடு இயற்றிடினும் ஒருநாள் வளர்த்ததற்கு இணையாவே என வேதநாயகம் பிள்ளை பாடிச் சென்றார். தாய் தன்னுடைய உயிரைப் பணையம் வைத்துத் தானே குழந்தையைப் பெறுகிறாள்! பெற்ற அன்று தொடங்கிய துன்பம் அவன் பெரியவனாகிறவரை தொடர்

கிறது. சுவைப் பொருளைக் கண்டால், தான் உண்ணாமல் குழந்தைக்கு என்று எடுத்து வைப்பவள் தாய்தான். மாம்பழம் முதலிய பொருள்கள் எத்துணைச் சுவையுடையன! அவற்றை உண்டால் குழந்தைக்கு ஒத்துக் கொள்ளா என்பதற்காகவே, தாய் அவற்றை உண்பதில்லையன்றோ? குழந்தை பெறுதலும் வளர்த்தலும் தனது கடமை என்பதற்காக, அத்தாய் எத்துணைத் தூரம் தன் நலத்தை விட்டுத் தருகிறாள்! இது கருதியேதான் இறைவனைக்கூட அடியார் தாய் என்றே போற்றினர். **அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே!** என்றும், **தாதாய்! மூவேழ் உலகுக்கும் தாயே!'** என்றும் திருவாசகம் பேசுகிறது.

எனவே, தாயின் கடமைகளைப் பேச வந்த அத்தாய்ப் புலவர், 'பெற்று வளர்ப்பது என்னுடைய கடனாகும்' என்ற பொருளில், **ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே** என்று கூறினார். தம் கடமையைக் கூறிய புலவருக்குத் தந்தையின் நினைவு வருகிறது. ஆம்! பெற்று வளர்த்து விட்டால் மட்டும் போதுமா? தாம் பெற்று வளர்த்த பிள்ளை பிறரால் 'மனிதன்' என்று மதிக்கப்பட வேண்டாமா? எத்துணைச் சிறந்த அறிவுடைய தாயானாலும். மகனைச் சான்றோன் ஆக்க இயலாது. அவளுடைய தாயன்பு குறுக்கே நின்று, அவன் பிழைகளை அவள் காணாதவாறு செய்துவிடும்.

எனவே, மகனைக் கண்டித்து வளர்க்கும் பொறுப்பைத் தந்தையிடம் விட்டுவிடுகிறார் அத்தாய்ப் புலவர். பாடலின் இரண்டாம் அடியில், **சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே** என்று கூறும் பொழுது, கடமை உணர்ச்சி அப்பெண்பாற்புலவரிடம் எவ்வளவு இருந்த தென்பதை நன்கு அறிய முடிகிறது. சான்றோன் என்ற ஒரே சொல்லில் எத்துணைப் பொருட்சிறப்பை வைக்கிறார் புலவர்! மனிதனாய்ப் பிறந்தவன் மகாத்துமாவும் ஆகலாம்; துராத்துமாவும் ஆகலாம். மகாத்து

மாவாகும் பொழுது உலகம் அவனைச் சான்றோன் என வழங்குகிறது. சான்றாண்மை என்ற பெருங்குணத்தை வள்ளுவர் இதோ குறிக்கிறார்: பல நற்குணங்களாலும் நிறைந்து அவற்றை ஆளுந்தன்மையே சான்றாண்மை எனப்படும். அப்பல குணங்கள் யாவை? அன்புடைமை, பழிபாவங்கட்கு நாணுதல், பிறரிடத்துப் பரிவு காட்டல் (கண்ணோட்டம்), வாய்மை, ஒப்புரவு என ஐந்தும் சால்புடைமை என்னும் மாளிகையைத் தாங்கும் தூண்களாம்.

'அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்.' (குறள், 984)

என்ற குறளாலும், பிறர் தீமை சொல்லாமை (984), தாழ்ந்தவரிடங்கூடத் தோல்வியை ஒப்புக்கொள்ளுதல் (986), தீமை செய்தவர்க்கும் நன்மையே புரிதல் (987) முதலியவற்றாலும் சான்றாண்மை விளக்கப்படுகிறது.

குறள் தோன்றி இரண்டாயிரம் ஆண்டுகள் கழித்து நம் நாட்டில் ஒரு சான்றோர் நம் காலத்தில் வாழ்ந்தார். சான்றாருக்கு இவ்வுலகம் தகுதி இல்லை என்று அவரைக் குண்டுக்கு இரையாக்கிய புண்ணியம் நம்மைச் சாரும்.

இத்தகைய பண்புகளை ஒருவன் பெற்றால்தான் சான்றோன் எனப்படுவான். அப்பண்புகளை அவன் பெற உதவுவது தந்தையின் கடமை என்கிறார் தமிழ் மூதாட்டியார்.

இத்துணைப் பண்பாடுகளுடன் வளரும் மைந்தன், கடமைகளைச் செய்ய உதவுவது சமுதாயம். அவனுக்கு ஏற்ற தொழிலைத் தந்து அதனால் பயன் அடைய வேண்டுவது சமுதாயத்தின் கடமை. இதனை அப்புலவர் வேறு வழியிற் கூறுகிறார். மைந்தனுக்கு வேலாயுதத்தைச் செய்து கொடுத்தல் கொல்லன் கடமை என்கிறார்.

'வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே'

என்ற அடியில், வேல் என்பது சமுதாயத்தில் அவன் மேற்கொண்ட பணிக்கு ஏற்ற கருவியைக் குறிக்கும் சொல்லாய் அமைந்துள்ளது.

சிறந்த மருத்துவனாக அமையக்கூடிய தகுதியும், சிறந்த பொறீ வல்லுநனாக (இஞ்சினீயர்) அமையக்கூடிய தகுதியும் இயற்கையில் சிலருக்கு அமைகின்றன. ஆனால், வாழ்க்கையில் வசதி இன்மையால் அவர்கள் அத்துறையில் முன்னேற முடிவதில்லை. அவ்வசதியைச் செய்து தர வேண்டுவது யாருடைய கடமை? பிறப்பில் விஞ்ஞானி யாகிய சர்.சி.வி. இராமனுக்கும், கவிஞனாகிய பாரதிக்கும் வாய்ப்புடைய சோதனைச் சாலையும், சிறந்த பத்திரிகை யும் இல்லை என்றால், குறை யாருடையது? சமுதாயத் தினுடையது தான்! வேண்டிய கருவிகளை வாங்க இயலா மல் இராமனும், பாடினதை அச்சடிக்க இயலாமல் பாரதி யும் இருந்தால், இந்தச் சமுதாயத்தை என்ன செய்யலாம் வாய் கூசுகிறது. மேற்கொண்டு சொல்ல! 'கொல்லன்' என்று பாடலில் வருஞ்சொல் சமுதாயத்தையும் 'வேல்' என்று வருவது சமுதாயம் உதவும் கருவிகளையும் குறித்து நிற்கின்றன.

சமுதாயத்தைக் 'கொல்லன்' என்ற சொல்லாற் கூறிய கவிஞர் அடுத்த அடியில்,

**'நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே'**

என்கிறார். சாப்பாட்டுக்குக் கவலை இல்லாமல் நல்ல நிலங்களைத் தருதல் மன்னன் கடமை என்பது இவ்வடி யின் நேரான பொருள். அவன் மேற்கொண்ட தொழிலை முட்டின்றி முடிக்க உதவுவது அரசு.

இவ்வுலகம் தோன்றிய நாளிலிருந்து ஒரு தவற்றை அரசியலார் செய்து வருகின்றனர். அவரவர் சக்தி அறிந்து பயன் படுத்தாமல், தவறான வேலை தந்து அவர்களால் பெறும் முழுப்பயனை அடைய முடியாமற்போனதுதான்

அந்தக் கதை. 'பைரன்' போன்ற சிறந்த கவிஞர் போர்க்களத்தில் உயிரை விட நேர்ந்தது எதனால்? பாரதி பட்டினியால் வாடி உயிரை விட்டது எதனால்? தொல்காப்பியம் பதிப்பிக்கவல்ல வ. உ. சிதம்பரனார் செக்கிழுத்தது எதனால்? அரசியலாரது தவற்றால். இவ்வாறு செய்யாமல், அவர்களால் பெறும் பயனை அடைய வேண்டும் என்பதைத்தான் இவ்வடி குறிப்பிட்டது.

இத்துணைப் பேர்களும் தங்கள் கடமைகளைச் சரிவரச் செய்தால், தனி மனிதன் தன் கடமையைச் சரிவரச் செய்வான். அவன் கடமை என்று பாடல் குறிப்பது, ஒளி பொருந்திய வாளை வீசி, யானையை வென்று மீளுதல் என்றதையாம். போர் செய்தல் என்பது இவ்வடியின் பொருளானாலும், எல்லாக் கடமைகளையும் சிறந்த முறையில் முடிப்பதை இது கூறுவதாகக் கொள்ளலாம்.

இதோ பொன் முடியார் என்ற பெண்பாற் புலவர் பாடிய பாடல் :

**'ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே!**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே!**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே!**
**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே!**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே!'**
[நன்னடை— நல்ல விளைநிலம்]. (புறம் : 312)

மகளிர் பாடிய பாடல்களுள் எல்லாம் தலையாய பாடல் இது. அது தெரிந்துதான் போலும் இவ்வம்மையார்க்குப் 'பொன்முடியார்' என்று பெயர் வைத்தார்கள்!

## 6. துறவு பாடிய மகளிர்

சோழ நாட்டில் வளஞ்செறிந்த ஓரூரில், 'வான் பொய்ப்பினும் தான் பொய்யா'மல் மலையிலிருந்து புறப் பட்ட காவிரி பல கால்வாய்களாய் ஓடிப் பொன் விளையச் செய்தது. இத்தகைய வளமிக்க நாட்டில் பல நிலங்கட்குத் தலைவன் ஒருவன். குறுநில மன்னன் என்றுகூடக் கூறலாம் அவனை. அவனுடைய நிலங்கள் 'வேலி ஆயிரங் கலம் விளைந்து' பயன் தந்தன. இத்துணைச் செல்வம் உடைய னாயினும், அப்பெருமகன் வாழ்வின் பயனை நன்கு அறிந்தவன். அவனுடைய குடும்பமும் மிகப் பெரியது. அனைத்து வகையாலும் செழிப்புடன் வாழ்ந்த அவன் இம்மை உலகத்தில் இசையோடு வாழ முற்பட்டான்.

முன்பின் தெரியாத ஒருவனும் ஒருத்தியும் ஒருவரை ஒருவர் விரும்புவதும் அதற்கெனத் தங்கள் நலன்களை விட்டுக் கொடுக்க முன் வருவதும் எதனால்? காதல் என்ற ஒரு பிணிப்பால் அன்றோ! அந்தப் பிணிப்பு ஏற்பட்ட உடனே ஒருவனுடைய தன்னலம் ஓரளவுக்கு விடுபடுகிறது. தன்னால் காதலிக்கப் பெற்றவள் பொருட்டு, ஓரளவு தன்னலத்தைத் துறக்கப் பழகுகின்ற மனிதன், குடும்பம் என்ற ஒன்று வைத்து வாழத் தொடங்குகிறான். அதில் ஏற்படும் மகப்பேறு முதலியன அவனுடைய அன்பை விரிவுபடுத்தித் தன்னலத்தை இன்னுஞ் சிறிது துறக்கச் செய்கின்றன. விருந்தினர், சுற்றத்தார் என்பவர் புகுந்து, மேலும் அவனுடைய மனத்தை விரிவடையச் செய்கின் றனர். இதுவே இல்லறத்தின் தலையாய பயனாகும்.

எவ்வளவு சிறந்த முறையில் இல்லறம் அமைந்து விடினும், இந்த அளவுக்குமேல் அவனுடைய மனம் விரி வடைவதில்லை. அதாவது, தன் மனைவி, மக்கள், சுற்றத் தார், விருந்தினர் என்ற அளவுக்கே மனம் விரிவடைகிறது.

அதாவது, தொடர்புடையார் மாட்டு மனம் விரிவடைகிறது. சற்றும் தொடர்பில்லாதவர் மாட்டும் அன்பு பெருகும் பொழுதுதான் அது 'அருள்' என்னும் பெயரைப் பெறுகிறது. இவ்வருளை மனிதன் அடையும் பொழுது தான் மனிதனாய்ப் பிறந்ததன் பயனை முழுவதும் பெறுகிறான். இல்லறத்தில் தொடங்கும் அன்பே முடிவில் அருளாய்ப் பரிணமிக்கிறது. அன்பும் அருளும் வளர ஏதுவாய் இல்லற வாழ்வில் நல்முறையில் வாழ்ந்தார் சோழ நாட்டு நிலக்கிழார்.

எத்துணை நாட்களுக்குத்தான் இல்வாழ்வில் இருப்பது? இதுவரை அமைதியோடிருந்த அவருடைய மனம் அமைதியை மெல்ல இழக்கத் தொடங்கியது. பல நாள் தம்முடைய அமைதியின்மைக்குக் காரணம் யாது என ஆய்ந்து பார்த்தார்; இவ்வாழ்வு உவர்ப்பதை மெள்ள அறிந்தார்; தம் மனம் அமைதியை இழக்கக் காரணம், தம்முடைய பொறிபுலன்கள் அடக்காமையே என்பதைக் கண்டார்; பொறி புலன்கள் அடங்கினாலன்றி, மனம் அடங்க வழி இல்லை என்பதைக் கண்டார். பொருள்களை விட்டு நீங்கிச் செல்லுதலே சிறந்த வழியாகும்.

சோழ நாட்டுச் செல்வரும் இவ்வாறு செய்யத் துணிந்துவிட்டார்; தம்முடைய பெருஞ்செல்வத்தை விட்டு விட்டுக் காடு நோக்கிச் சென்று தவஞ்செய்ய முடிவு செய்துவிட்டார்.

> 'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
> அதனின் அதனின் இலன்'
>
> 'வேண்டின்உண் டாகத் துறக்க! துறந்தபின்
> ஈண்டுஇயற் பால பல.' *(குறள், 341, 42)*

என்பவை குறளாசிரியர் கட்டளை அல்லவா? ஒவ்வொரு பொருளாக ஒருவன் துறந்தாலும் அதனால் வருந்துன்பத்தினின்று விடுதலையடைவான் என்பதும், துறந்த பிறகு பெரிய இன்பங்கள் வருமாகலான் அவை வேண்டுமாயின்

இப்பொழுதே துறவை மேற்கொள்க என்பதும் இப்பாக்களின் பொருள். எனவே, செல்வர் துறவு மேற்கொண்டு காடு செல்ல முடிவு செய்ததில் தவறு ஒன்றும் இல்லை.

பல ஏவலாளர்களை வைத்து வேலை வாங்கிக் கொண்டு வாழ்ந்தவர் அவர்; தாமாக எந்த வேலையையும் செய்தது இல்லை; தம்முடைய சொந்த அலுவல்களுக்குக் கூடப் பிறரை ஏவுவதில் இன்பங் கண்டு வாழ்ந்தவர்தாம். ஆனால், காடு சென்ற பிறகு வாழ்வில் எத்தகைய பெரிய மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன! அச்செல்வர் நாட்டில் நலத்துடன் வாழுங் காலத்தில் **மாரிப்பித்தியார்** என்ற பெண் பாற்புலவர் அவருக்கு நண்பராய் அமைந்திருந்தார். இச் செல்வரும் அப்புலவரும் ஏறத்தாழச் சம வயதுடையவர்கள். செல்வர் தம் இளமைக் காலந்தொட்டே புலவரை நன்கு அறிவார். அடிக்கடி செல்வராகிய நண்பரைச் சென்று பார்த்து வருவார், மாரிப்பித்தியார் என்ற அப்புலவரும்.

அவ்வளவு நெருங்கிப் பழகிய செல்வராகிய நண்பர், துறவு மேற்கொண்டு காடு சென்று சில ஆண்டுகளாகி விட்டன. திடீரென ஒரு நாள் புலவர் தம்முடைய நண்பரை நினைத்துக்கொண்டார். அவரைச் சென்று காண வேண்டும் என்ற எண்ணம் உண்டாகிவிட்டது. ஆனால், புலவரோ, பெண்பாலார். எனவே, காட்டில் தனித்துச் செல்லுதல் தகவுடையதாகவும் படவில்லை. என்ன செய்வார்! நண்பர் சிலர்க்குத் தம் மனக்கருத்தைத் தெரிவித்தார். துறவியாரைச் சென்று காண அவர்களும் வருவதாக ஒப்புக்கொண்டனர்.

ஆடவர் பலருடைய துணையுடன் மாரிப்பித்தியார் என்ற அவ்வம்மையார் காடு நோக்கிப் புறப்பட்டார். காட்டில் நீண்ட தூரம் சென்ற பிறகு ஒரு துறவியாரை எதிர்ப்பட்டார்கள்.

இப்பொழுதே துறவை மேற்கொள்க என்பதும் இப்பாக்களின் பொருள். எனவே, செல்வர் துறவு மேற்கொண்டு காடு செல்ல முடிவு செய்ததில் தவறு ஒன்றும் இல்லை.

பல ஏவலாளர்களை வைத்து வேலை வாங்கிக்கொண்டு வாழ்ந்தவர் அவர்; தாமாக எந்த வேலையையும் செய்தது இல்லை; தம்முடைய சொந்த அலுவல்களுக்குக் கூடப் பிறரை ஏவுவதில் இன்பங் கண்டு வாழ்ந்தவர்தாம். ஆனால், காடு சென்ற பிறகு வாழ்வில் எத்தகைய பெரிய மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன! அச்செல்வர் நாட்டில் நலத்துடன் வாழுங் காலத்தில் **மாரிப்பித்தியார்** என்ற பெண்பாற்புலவர் அவருக்கு நண்பராய் அமைந்திருந்தார். இச்செல்வரும் அப்புலவரும் ஏறத்தாழச் சம வயதுடையவர்கள். செல்வர் தம் இளமைக் காலந்தொட்டே புலவரை நன்கு அறிவார். அடிக்கடி செல்வராகிய நண்பரைச் சென்று பார்த்து வருவார், மாரிப்பித்தியார் என்ற அப்புலவரும்.

அவ்வளவு நெருங்கிப் பழகிய செல்வராகிய நண்பர், துறவு மேற்கொண்டு காடு சென்று சில ஆண்டுகளாகி விட்டன. திடீரென ஒரு நாள் புலவர் தம்முடைய நண்பரை நினைத்துக்கொண்டார். அவரைச் சென்று காண வேண்டும் என்ற எண்ணம் உண்டாகிவிட்டது. ஆனால், புலவரோ, பெண்பாலார். எனவே, காட்டில் தனித்துச் செல்லுதல் தகவுடையதாகவும் படவில்லை. என்ன செய்வார்! நண்பர் சிலர்க்குத் தம் மனக்கருத்தைத் தெரிவித்தார். துறவியாரைச் சென்று காண அவர்களும் வருவதாக ஒப்புக்கொண்டனர்.

ஆடவர் பலருடைய துணையுடன் மாரிப்பித்தியார் என்ற அவ்வம்மையார் காடு நோக்கிப் புறப்பட்டார். காட்டில் நீண்ட தூரம் சென்ற பிறகு ஒரு துறவியாரை எதிர்ப்பட்டார்கள்.

அதாவது, தொடர்புடையார் மாட்டு மனம் விரிவடைகிறது. சற்றும் தொடர்பில்லாதவர் மாட்டும் அன்பு பெருகும் பொழுதுதான் அது 'அருள்' என்னும் பெயரைப் பெறுகிறது. இவ்வருளை மனிதன் அடையும் பொழுதுதான் மனிதனாய்ப் பிறந்ததன் பயனை முழுவதும் பெறுகிறான். இல்லறத்தில் தொடங்கும் அன்பே முடிவில் அருளாய்ப் பரிணமிக்கிறது. அன்பும் அருளும் வளர ஏதுவாய் இல்லற வாழ்வில் நல்முறையில் வாழ்ந்தார் சோழ நாட்டு நிலக்கிழார்.

எத்துணை நாட்களுக்குத்தான் இல்வாழ்வில் இருப்பது? இதுவரை அமைதியோடிருந்த அவருடைய மனம் அமைதியை மெல்ல இழக்கத் தொடங்கியது. பல நாள் தம்முடைய அமைதியின்மைக்குக் காரணம் யாது என ஆய்ந்து பார்த்தார்; இவ்வாழ்வு உவர்ப்பதை மெள்ள அறிந்தார்; தம் மனம் அமைதியை இழக்கக் காரணம், தம்முடைய பொறிபுலன்கள் அடக்காமையே என்பதைக் கண்டார்; பொறி புலன்கள் அடங்கினாலன்றி, மனம் அடங்க வழி இல்லை என்பதைக் கண்டார். பொருள்களை விட்டு நீங்கிச் செல்லுதலே சிறந்த வழியாகும்.

சோழ நாட்டுச் செல்வரும் இவ்வாறு செய்யத் துணிந்துவிட்டார்; தம்முடைய பெருஞ்செல்வத்தை விட்டு விட்டுக் காடு நோக்கிச் சென்று தவஞ்செய்ய முடிவு செய்துவிட்டார்.

> 'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
> அதனின் அதனின் இலன்'
>
> 'வேண்டின்உண் டாகத் துறக்க! துறந்தபின்
> ஈண்டுஇயற் பால பல.' (குறள், 341, 42)

என்பவை குறளாசிரியர் கட்டளை அல்லவா? ஒவ்வொரு பொருளாக ஒருவன் துறந்தாலும் அதனால் வருந்துன்பத்தினின்று விடுதலையடைவான் என்பதும், துறந்த பிறகு பெரிய இன்பங்கள் வருமாகலான் அவை வேண்டுமாயின்

அத்துறவியாரது தலை தில்லந்தளிர் போலச் செம்பட்டை நிறத்துடன் சடை பிடித்துக் கிடந்தது. காலை, மதியம், மாலை என்ற மூன்று வேளையும் ஒலியுடன் கீழே வீழ்ந்து கொண்டிருக்கும் அருவியில் அத்துறவியார் தவறாமல் நீராடுகிறார். மூன்று வேளையும் நீராடுவதால் அத்தலைமயிர் காயாமல் இருப்பதுடன், நாளாவட்டத்தில் அதன் பழைய நிறமும் கெட்டுவிட்டது. நீண்ட உயரத்திலிருந்து விழும் அருவியில் தலையை நீட்டி நீராடுவதால், மெள்ளத் தலை மயிர் உதிரத் தொடங்கி விட்டது. இவ்வாறு மூன்று வேளையும் நீராடி விட்டு, அத்துறவியார் நிறைந்த இலைகளையுடைய தாளி என்ற செடியிலிருந்து இலைகளைப் பறிக்கிறார், வழிபாடு செய்வதற்காக.

துறவியாரது இப்புதிய கோலத்தைக் கண்ட மாரிப்பித்தியார் அப்படியே அயர்ந்து விட்டார். துறவியாரது பழைய வாழ்வும், இப்பொழுதைய வாழ்வும் அப்புலவருடைய மனக்கண் முன்னர் மாறி மாறி வந்தன! புலவர் அசையாமல் ஆடாமல் நின்று நின்றுவிட்டதைக் கண்டவுடன் வந்த நண்பர்கள் கலக்க மெய்தி விட்டார்கள். அத்துறவியாரது பழையகால வாழ்வை அறியாதவர்கள் அவர்கள். எனவே, புலவரை நோக்கி, 'அம்மையீர், இத்துறவியார் இல்வாழ்வில் இருந்ததுண்டா ?' என்று வினவினார்கள். அவர்கட்கு விடை கூறுகிறார் புலவர், இரு பாடல்கள் மூலம்.

'ஐயன்மீர், இத்துறவியாரது இப்பொழுதைய வாழ்வை மட்டுமே நீங்கள் காண்கிறீர்கள். ஆனால், இவருடன் இளமை தொட்டுப் பழகிய எனக்கு அக்கால நினைவுகள் வந்து வந்து செல்கின்றன. இப்பொழுது பொலிவிழந்து காணப்படுகிறார் இவர். இவரது சடை முதுகிற் கிடந்து உலர மறுக்கின்றது. அந்நாளில் இவரது குஞ்சி அழகே ஓர் அலாதி அழகு. இவர் பெருஞ்செல்வராகலின், சிறந்த வாசனைத் தைலங்கள் இட்டுப் பள

பளபளவெனச் சீவி முடித்த தமது முடியுடன் மாலை நேரங்களில் உலாவப் புறப்படுவார். இவர் வாழ்ந்தது செல்வர்கள் வாழ்கின்ற பெரிய தெருவிலாகும். அத்தெருவில் ஒவ்வொரு வீடும் பெரிய அரண்மனை போன்றதாகும். இவர் உலாவப் புறப்பட்டவுடன் அவ்வீடுகளில் வசிக்கும் திருமணம் ஆகாத பெண்டிர் அனைவரும் கதவிடுக்கு வழியாகவும், காலதர் வழியாகவும் இவரைக் கண்டு மகிழ்வர்.

'அவர்கள் இவரைக் கண்டவுடன் தங்கள் மனத்தைப் பறிகொடுத்துவிட்டுக் காதல் நோய் கைம்மிகத் தங்களுடைய வளையல்கள் கழன்று விழ, மனம் வருந்தி நிற்பார்கள். அவர்கள் அவ்வாறு நிற்கும் காட்சி, இத்துணை ஆண்டுகள் கழித்தும் என் கண்ணை விட்டு நீங்க மறுக்கிறது. இப்பொழுது இவர் தாமே விறகை ஒடித்து எடுத்துச் சென்று தீ மூட்டிச் சடையைக் காய வைக்க முயல்கிறார். அந்த நாளைய சூழ்நிலை எங்கே, அகிற் புகையில் குஞ்சியை இவர் இப்பொழுது யானை ஒடித்துப் போட்ட விறகில் உலர்த்தும் நிலை எங்கே!' என்ற கருத்துப்பட ஒரு பாடல் பாடினார் அம்மையார்.

> 'ஓவத்து அன்ன இடனுடை வரைப்பில்
> பாவை அன்ன குறுந்தொடி மகளிர்
> இழைநிலை நெகிழ்த்த மள்ளன் கண்டிகும்,
> கழைக்கண் நெடுவரை அருவி ஆடிக்
> கான யானை தந்த விறகில்
> கடுந்தெறல் செந்தீ வேட்டுப்
> புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே!'
>
> (புறம். 251)

(ஓவத்தன்ன— சித்திரம் போன்ற; இடனுடை வரைப்பு—அகன்ற வீடு; இழைநிலை நெகிழ்த்த மள்ளன்— வளையல்கள் கழலுமாறு செய்த வீரன்; புறந்தாழ் புரிசடை— முதுகில் தொங்கும் முறுக்கேறிய சடை)

உடன் வந்தவர்கள் அத்துறவியாரை மேலும் வியப்புடன் பார்த்துக்கொண்டேயிருந்தார்கள். துறவியார்

வாய் திறந்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அவர்கள், 'இவர் ஒரு வேளை ஊமையோ!' என ஐயுற்றார்கள். புலவர் கூறினார்: 'ஒலியுடன் விழுகின்ற அருவி நீரைத் தலையில் தாங்குவதால் நிறம் மாறித் தில்லந்தளிர் போலக் குறைவாக உள்ள தலைமயிரை உடைய இவர், இப்பொழுது தாளி இலையைப் பறிக்கின்றார். ஆனால், அந்த நாளில் வீட்டினுள் விளையாடும் இளைய மயில் போன்ற தம் மனைவியிடத்துப் பேசுவதைக் காண்டல் வேண்டும். இவர் பேச்சைக் கேட்டு மயங்கியே அவ்வம்மை இவரை மணந்துகொண்டாள். தம் சொல்லாகிய வலையால் மனைவியாகிய மயிலைப் பிடித்த வேடராவர் இவர்,' என்று பாடினார்.

> 'கறங்குவெள் அருவி ஏற்றலின் நிறம்பெயர்ந்து
> தில்லை அன்ன புல்லென் சடையொடு
> அள்இலைத் தாளி கொய்யு மோனே!
> இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
> சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே!'
>
> (புறம். 252)

(தில்லை-தில்லந்தளிர்; அள் இலை- செறிந்த இலை)

இப்பாடலிலும் முன் பாடலிலும் உள்ள இறுதி இரண்டு அடிகளும் அப்புலவர் பெருமாட்டியாரது உள்ளத்தில் தோன்றிய எல்லை இல்லாத துயரத்திற்கு வடிவு கொடுக்கின்றன அல்லவா? துறவியாரைக் கண்டு ஒரு பெண்பாற் புலவருக்குத்தானே இவ்வாறு பாட வரும்?

## 7. பிரிவைப் பாடிய மகளிர்

மனிதப் பிறப்பு எடுக்கும் பொழுதே துயரமும் உடன் பிறக்கிறது. எத்தனையோ வழிகளில் இத்துயரம் வருதல் கூடும். எந்த வழியில் வந்தாலும் துயரம் துயரந்தானே!

வருத்தம் நேரும் பொழுது மனித மனம் பலபடியாக எண்ணத் தொடங்குகின்றது.

பல் வலி, வயிற்று வலிகளால் ஏற்படும் துயரம், துன்பம் என்றே கூறப்படினும், அவை உபசார வழக்கால் மட்டுமே அங்ஙனம் கூறப்படுகின்றன. உண்மையில் துயரம் என்பது பின்னர்க் கூறப்பெற்றவை மூலம் ஏற்படும் பொழுது, அவற்றின் தன்மை, ஆழம் முதலியன முற்றிலும் மாறுபட்டு விடுகின்றன.

பிரிவுத் துயரம் என்பது பலரைப் பலபடியாக வருத்தும். கணவனை இழக்கும் துயரம் என்பது அலாதியானது. இந்நாட்டுச் சூழ்நிலையில், கணவன் என்பவன், மனைவி என்னும் கொடி பற்றிப் படரும் கொழுகொம்பாகவே அமைந்துவிடுகிறான். அவளுக் கென்று தனி வாழ்வே இருப்பதாகத் தெரியவில்லை. அனைவரும் எல்லா வகையிலும் சமம் என்று கூறிக் கொள்ளும் மேல் நாடுகளிற்கூட, கணவன் பெயரையே மனைவியர் ஏற்றுக்கொள்கின்றனர். 'திருமதி (Mrs.) இன்னார்' என்று அவனுடைய பெயரேதான் அவளுடைய பெயராய் அமைந்து விடுகிறது. அவ்வாறாயின், இந்நாட்டில் கேட்கவும் வேண்டுமோ !

தனக்கென்று தனி வாழ்வு இல்லாமல், கணவனது வாழ்வே தன்னது வாழ்வாகவும், அவனது வீழ்ச்சியே தனது வீழ்ச்சியாகவும் கருதினள் இந்நாட்டுப்பெண். இந் நிலை பழைய நாளில் மட்டும் அன்றி, இன்றுங்கூட ஏறத் தாழ அப்படியேதான் இருக்கிறது. மரத்தைப் பற்றிப் படரும் கொடியின் வாழ்வு, அந்தக் கொடி விரும்பி னாலும் விரும்பாவிட்டாலும், மரத்துடன் இணைந்தே உள்ளது. மரத்தை விட்டு வீழ்ந்துவிட்ட கொடியும் குடும்பத் தலைவனை இழந்த தலைவியின் வாழ்வும் ஏறத் தாழ இதே நிலைதான். தலைவனை இழந்து தலைவி படும் துயரத்தை மற்றொரு பெண்தான் அனுபவிக்க முடியும்.

எவ்வளவு தூரம் ஓர் ஆண் மகன் அத்துயரத்தைக் கற்பனை செய்துகொண்டாலும் முற்றிலும் அதனை அறிய முடியாது ; அறிந்தாலும் அதை உணர முடியவே முடியாது. ஒருவர் படுந்துயரத்தை அறிதல் வேறு ; அதனை உணர்வது வேறு. மருத்துவன் நோயாளியின் நோயையும் அது வந்த காரணத்தையும் அறியலாம். ஆனால், நோயாளியின் வருத்தத்தை உணர முடியாது. ஒரு வேளை மருத்துவனும் அந்நோயில் துன்புற்றிருந்தால், அவன் வருத்தத்தை உணர முடியும்.

நல்ல ஒரு தமிழ் மகன் வீட்டைக் காண்கிறோம். பல்வகை வளங்களும் அப்பெருமகன் வீட்டில் நிறைந்துள்ளன. வளங்கள் நிறைந்திருந்தால் மட்டும் போதுமா ? இன்று எத்துணைப்பேர் வீடுகளில் அனைத்து வளங்களும் நிறைந்துள்ளன ? ஆனால், அவ்வளத்தால் யாருக்கு என்ன பயன் ? பல சமயங்களில் அவ்வீட்டாருக்குக்கூட அவ்வளத்தால் ஏற்படும் பயன் கிட்டுவதில்லை. ஏன் ? செல்வம் முதலிய வளமுடைய மனிதனிடம் மனவளம் இல்லையாயின், யாது பயன் விளையும் ? பொருளைப் பெற்று வைப்பது, பிறருக்கு வழங்கித் தானும் அனுபவிக்கத் தானே ? அவ்வாறு பிறருக்கு வழங்க முற்படும் மனத்தைத் தான் வளமுடைய மனம் என்று கூறுகிறோம். ஆனால், மன வளம் இயற்கையிலேயே கிடைக்க வேண்டும்; பிறப்பிலேயே ஊறியிருத்தல் வேண்டும்.

**'மணிவெளுக்கச் சாணையுண்டு முத்துமாரி யம்மா !**
**மனம்வெளுக்க வழியிலையே முத்துமாரி யம்மா !'**

என்று கவியரசர் பாரதியார் கதறுவதன் கருத்து இதுவே.

மன வளமும் பொருள் வளமும் நிறைந்த அத்தமிழ்ப் பெருமகன் வீட்டிற்குத் 'தாயங்கண்ணியார்' என்ற புலவர் பெருமாட்டியார் ஒருமுறை சென்றிருந்தார். அச்செல்வன் அரசன் அல்லன் ; குறுநில மன்னனும் அல்லன் ; ஆனால், நிறைந்த செல்வமுடைய குடிமகன்தான். அவனைப் பார்க்கச் சென்ற புலவருக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது.

செல்வன் வீட்டில் பெருங் கூட்டம்! 'ஏதேனும் விசேட மாய் இருக்கும்; உறவினர்கள் வந்திருக்கலாம்,' எனக் கருதினார் புலவர். நெருங்கிச் சென்று கண்ட பொழுது, உண்மை தெரிந்தது. கூட்டத்தினர் அவனுடைய உறவினர் அல்லர். அனைவரும் இரவலர்; வள்ளலைத்தேடிச்சென்று பாட்டுப் பாடியும் நாட்டியமாடியும் பரிசில் பெறும் ஏழை மக்கள். அத்துணைப் பேருக்கும் செல்வன் வீட்டில் விருந்துச் சமையல் நடைபெறுகிறது. என்னே, இச்செல் வனது தாராளம்! வீட்டினுள் நுழையும் போதே தாளித வாசம் மூக்கைத் துளைக்கிறது.

பண்டங்கட்குத் தாளிதம் செய்து மணத்தை மிகுதிப் படுத்தும் வித்தையைத் தமிழப்பெண் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே கண்டு வைத்திருந்தாள்! கோலா கலமான நிலையில் உள்ள செல்வன் வீட்டில் நுழைந்தார் அம்மையார் உள்ளே இருக்கும் விருந்தாளிகளைக் கண்டு, 'என்ன விசேடம்?' என்று கேட்டார். விசேடம் ஒன்றும் இல்லையாம்— செல்வனைக் கண்டு பரிசில் வாங்கிப்போக வந்த இரவலர்களாம் அவர்கள்! 'விசேடமில்லாத சாதா ரண நாளில் இவ்வளவு தடபுடலாகச் சமையல் ஏன்?' இது புலவர் பெருமாட்டியாரது வினா.

விருந்தினர்கள் சிரித்தார்கள்; வாய் விட்டுச் சிரித் தார்கள்; ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு கண் சிமிட்டிக்கொண்டு மேலுஞ் சிரித்தார்கள். அம்மையார் மருண்டு விட்டார்; 'கேட்கத் தகாதவற்றைக் கேட்டு விட்டோமா!' என்று அஞ்சி விட்டார். உடனே அவரது முகம் வாடிவிட்டது. இதனைக் கண்ட அப்பரிசிலர்களுள் ஒரு முதியவன் புலவரின் பக்கத்தில் வந்து பேசத் தொடங் கினான். 'அம்மையீர்! மன்னிக்க வேண்டும், இவ் வீட்டிற்கு நீங்கள் இதற்கு முன் வந்ததில்லை போலிருக் கிறது!'

'இல்லை. இது வரை வந்ததில்லை.'

'அது தெரிகிறது, உங்கள் வினாவிலிருந்ே

புலவர் மேலும் வருந்தினார். இரவலன் மேலுங் கூறினான்.

'அம்மையீர், இச்செல்வன் வீட்டில் விசேடந்தான். தினந்தோறும் நூற்றுக் கணக்கான பரிசிலர் வருவர். அத்துணைப் பேருக்கும் விமரிசையான விருந்து நடைபெறும். தாளிதப் புகையின் வாசனையால் தெருவில் செல்கிறவர்கள் உள்ளே வந்துவிடுகிறார்கள். அம்மட்டோ! வந்தவர்கள் திரும்பிப் போவது பற்றியே கவலைப்படுவதில்லை. அதைக்கொண்டே உள்ளே வந்தவர் பலர். அதோ, அங்கு நிற்கும் இரவலன் இவ்வீட்டினுள் நுழைந்து ஓராண்டு ஆகிறது. யான் இங்கு வந்து ஒன்றரை ஆண்டாகிறது. செல்வர் எங்களை விட்டால்தானே, நாங்கள் வீடு திரும்ப முடியும்?'

புலவர் பெருமாட்டியார் வாய் பேச முடியாமல் அயர்ந்து விட்டார். அச்செல்வன் வீட்டில் சில நாள் தங்கி மீண்டுவிட்டார்.

ஓராண்டு ஓடி மறைந்தது. புலவர் தாயங்கண்ணியார் மறுபடியும் அந்தச் செல்வன் ஊர்ப்பக்கம் செல்ல நேர்ந்தது. அவர் அவன் வீட்டு வாயிற் பக்கம் போனார். தாளித மணம் ஒன்றும் வீசவில்லை. வருவாரும் போவாரும் நிறைந்திருந்த அவ்வீட்டில் குருவிகூட இல்லை. புலவருக்கு வியப்புத் தாங்கவில்லை. 'இப்படியும் இருக்க இயலுமா!' என ஐயுற்றார்; அடைத்திருந்த கதவைத் துணிந்து திறந்து கொண்டு உட்சென்றார். முன்னர் அவர் வந்த பொழுது உபசரித்த செல்வரின் மனைவியா இவள்! இது என்ன கோலம்! இவள் உடம்பு பாதியாகி விட்டது. தலையைப் பார்த்தார் புலவர்; கழுத்தைக் கண்டார்; கைகளை நோக்கினார்; உடையை உற்றுப் பார்த்தார். உண்மை விளங்கிவிட்டது!

வீட்டினுள் நுழையும் போது, 'செல்வர் வெளியூர் சென்றிருக்கலாமோ!' என ஐயுற்ற புலவருக்கு அம்மையைக் கண்டவுடன் உண்மை தெரிந்துவிட்டது. செல்வன்

ஊருக்குச் சென்றுவிட்டான். ஆம்! வாராத ஊருக்குச் சென்றுவிட்டான்.

என்ன கொடுமை! அச்செல்வன் மனைவி, இக்கற்புக்கரசி, துயரமே உருவெடுத்தது போல இருக்கிறாள். இருக்கிறாளா? இல்லை! நடைப் பிணமாய் உலவுகிறாள். அதோ மூலைகளில் இவளுடைய பிள்ளைகள் ஒடுங்கி அமர்ந்து, ஏதோ பேசிக்கொள்கின்றனர். ஓடியாடித் திரிந்து, வருவோர் மனத்தையெல்லாங் கவர்ந்த இப் பிள்ளைகள், இப்பொழுது பெருங்காற்றால் வீழ்ந்துவிட்ட மரக்கிளைகள் போலப் பொலிவிழந்து காணப்படுகிறார்கள். இவர்கள் மனத்தைத் தேற்றப் புலவருக்கு வாய் இல்லை. புலவர் மனத்தில் துயரம் ஆறாய்ப் பெருகுகிறது. ஓராண்டுக்கு முன் வந்திருந்த பொழுது இவ்வீட்டில் நடைபெற்ற களியாட்டம் இவர் மனத்திரையில் ஓடுகிறது; இப்பொழுது இருக்கும் நிலையும் கண் எதிரில் தெரிகிறது. அல்லி அரிசியை உண்டு உயிர் வாழ்கிறாள் தலைவி. ஏன்? கைம்மை நோன்பு நோற்கிறாள். உயிரை ஏன் வைத்திருக்கிறாள் தெரியுமா? மூலையில் உள்ள அவ்விளங்குழந்தைகள் பொருட்டே அவள் வாழ்கிறாள். அவள் வாய் திறந்து ஒன்றுங் கூறவில்லை. ஆயினும், புலவருக்கு முற்றும் விளங்கி விடுகிறது. அத்துயரம் கவிதையாக உருவெடுக்கிறது.

'குய்குரல் மலிந்த கொழுந்துவை அடிசில்[1]
இரவலர்த் தடுத்த வாயில்[2] புரவலர்
கண்ணீர் தடுத்த தண்நறும் பந்தர்க்[3]
கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி[4]
அல்லி உணவின்[5] மனைவியொடு இனியே
புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்[6]
வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்
முனித்தலைப் புதல்வர் தந்தை
தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே.'

(புறம். 250)

[1. தாளிப்போசை மிகுந்த துவையலோடு கூடிய உணவு (2) இரவலர்களைத் தடுத்து உள்ளே அழைக்கும் (3) வருபவர் கண்ணீரை மாற்றும் வீட்டில் (4) மொட்டை யடித்த தலையுடன் வளையல் நீக்கிய கையுடன் (5) அல்லி அரிசியை உண்டு (6) வாழும் தலைவியுடன் உள்ள சோறை இழந்த வீடே! (திருநகர்-பெரிய வீடு) தனித்தலைப் பெருங் காடு-சுடுகாடு.]

புலவர் பெருமாட்டியார் ஒன்பது அடிகளில் ஒரு பெரிய அவல நாடகத்தை நம் மனக்கண் முன்னர் எழுதிக் காட்டிவிட்டார்! அவர்கள் வளர்த்த உயிருள்ள தமிழ் எங்கே? நாம் இன்று எழுதும் தமிழ் எங்கே? தமிழ் வளர் கிறதா நம்முடைய நாளில்?

## 8. தாமரைப் பொய்கை

தமிழ் வளர்ந்த பாண்டி நாட்டைப் பூதப் பாண்டியன் என்பவன் ஆட்சி செய்து வந்தான். பாண்டி நாட்டின் வடவெல்லையில் ஒல்லையூர் நாடு ஒரு சிறு பகுதி. பூதப் பாண்டியன் ஆட்சிக்கு வருமுன்னரே, இச்சிறு பகுதியைச் சோழர் பறித்துக் கொண்டனர் அக்காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னர்களால் ஒல்லையூரைச் சோழரிடமிருந்து மீட்க முடியவில்லை. ஒல்லையூர் கையை விட்டுப் போய் விட்டதால், பாண்டியருக்குப் பெருத்த நட்டம் ஒன்றும் இல்லை. ஆனால்........!

அரசராய் இருப்பவர் நட்டத்தையா கணக்கிடுவர்? சிறிய பகுதியாக ஒல்லையூர் இருப்பினும், அச்சிறு பகுதி யால் தம்முடைய மானமே போய்விட்டதாகப் பாண்டியர் கருதினர். அச்சிறு பகுதியை வென்றுவிட்டதால் செய்தற் கரிய காரியத்தைச் சாதித்துவிட்டதாகச் சோழரும் கருதிக் கொண்டனர். இச்சிறு பகுதியை மீட்கப் பல முறை

பாண்டியர் சோழர்மேல் படை கொண்டு தாக்கினர். யாது காரணமோ, பாண்டியர்க்கு வெற்றி கிட்டவில்லை.

இரண்டடி நிலத்துக்காகத் தாயத்தார் வழக்கிடுவதை நாம் கண்டிருக்கிறோமல்லவா ! அந்நிலத்தின் விலையைப் போல் பதினாயிரம் மடங்கு பணத்தை நீதி மன்றங்களில் செலவழிப்பார்கள். ஏன் தெரியுமா ? தம்முடைய மானமே அந்த இரண்டடி நிலத்தில் புதையுண்டு கிடப்பதாகக் கருது கிறார்கள் ; அவ்வாறே சொல்லவும் சொல்வார்கள். 'மானம்' என்பதன் பொருளை அறியாமற் பேசுகிறவர்கள் இவர்கள். இரண்டடி நிலம் கையை விட்டுப் போய் விடுவ தால் மானம், கௌரவம் என்பவை போய் விடுமா ?

மானம் என்பது யாது ? இதோ பரிமேலழகர் கூறு கிறார், 'மானம்' என்ற அதிகாரத்தின் முன்னுரையில். மானம் என்பது நிலத்திலும், பிறர் நம்மைப் பற்றி இழி வாகப் பேசுவதிலும் இருப்பதானால் திருவள்ளுவர் இம் மானத்திற்கு ஓர் அதிகாரமே எழுதுவாரா ? எனவே, மானம் என்பது நாம் நினைப்பதுபோல அவ்வளவு மட்ட மானதன்று. அது யாது ? **மனிதன் எஞ்ஞான்றும் (எப் பொழுதும்) தன் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு நேர்ந்துழி (வந்தால்) உயிர் வாழாமையுமாம்.** இவ்வாறு பரிமேலழகர் கூறியதை, வள்ளுவர் கருதியதை, அன்றும் ஒருவரும் அறியவில்லை ; இன்றும் ஒருவரும் அறிய முயல வில்லை.

ஒல்லையூர் நாடு சோழர் கையில் இருப்பதால் தம் முடைய மானம் போய்விட்டதாகப் பாண்டியர் கருதினர். ஒவ்வொரு பாண்டியன் காலத்திலும் ஒரு முறையும், பல முறையும் போரிட்டனர். ஆனால், உயிர்கள் அழிந்தது தவிரப் பாண்டியர்க்கு வெற்றி கிட்டவில்லை. இந்நிலை யில் பூதப்பாண்டியன் பட்டம் பெற்றுப் பாண்டிய நாட்டை ஆளத் தொடங்கினான்; தன் முன்னோர் செய்ய முயன்று தோற்றுப்போன காரியத்தைத் தான் எடுத்துச்

செய்து வெற்றி பெற்றுவிட வேண்டும் என்று கருதினான். அவ்வாறு கருதியது சரியோ தவறோ—அதுபற்றிக் கவலை இல்லை. பாண்டியர் குடிப் பெருமையைக் காப்பாற்ற இத்துணைப் பேர் உயிரை மாய்க்க வேண்டுமா என்று அம்மன்னன் சிந்தித்துப் பார்க்கவில்லை. அது தவறாய் இருக்கலாம். ஆனால், படை எடுப்பதன் முன் நன்கு சிந்தித்துத்தான் புறப்பட்டான்.

> 'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
> எண்ணுவ மென்பது இழுக்கு.' (குறள், 467)

என்று பொதுமறை கூறுவதை நன்கு ஆய்ந்து முடிவுக்கு வந்தான் பாண்டியன். அம்மட்டோ !

> 'வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
> துணைவலியும் தூக்கிச் செயல்.' (குறள், 471)

என்ற குறளுக்கு ஏற்பப் படையெடுப்பின் இயல்பையும், அதனைச் செய்ய வேண்டிய தன் படையின் வலிமையையும், மாற்றானாய சோழன் வலிமையையும், தனக்கும் சோழனுக்கும் துணை வரக்கூடியவர்கள் படைப் பலத்தையும் ஆராய்ந்து பார்த்தான். தன்படை, தன் துணைப் படை இரண்டையும் கொண்டு சோழனை வெல்ல முடியும் என்ற முடிவுக்கு வந்த பாண்டியன், அதற்கேற்ற காலத்தையும் ஆய்ந்தான்.

> 'பகல்வெல்லும் கூகையைக் காக்கை ; இகல்வெல்லும்
> வேந்தர்க்கு வேண்டும் பொழுது.' (குறள், 481)

என்பது குறள். காக்கையைவிடக் கூகை வலிவுடையதாயினும், பகல் நேரத்தில் காக்கையினிடம் தோற்றுவிடும். எனவே, எத்துணைப் படை வலியுடையனாயினும், காலம் சரியில்லையாயின், எஞ்சுவது தோல்வியே. இரஷியத் தலைநகரான மாஸ்கோவின் குளிர்காலக் கொடுமையை அறியாத நெப்போலியனும், ஹிட்லரும் அங்கே தோற்றமையைச் சரித்திரங் கூறுகிறது.

எனவே, பூதப் பாண்டியன் காலங்கருதி இடத்தாற் படை கொண்டு சோழர்மேல் சென்றான். விளைவைப் பற்றிக் கேட்க வேண்டுமா? ஒல்லையூர்ப் போரில் இம்முறை பாண்டியன் வெற்றி பெற்று விட்டான். நீண்ட நாளாகப் பாண்டியர் கண்டு கொண்டிருந்த கனவு, பூதப் பாண்டியன் காலத்தில் நனவாயிற்று. எனவே, அதிலிருந்து அவனுடைய பெயருடன் அவ்வெற்றியை இணைத்து 'ஒல்லையூர் தந்த (வென்ற) பூதப் பாண்டியன்' என்றே அனைவரும் வழங்கலாயினர்.

இப்பூதப் பாண்டியனுடைய புறவாழ்வில் பெரு வெற்றி கிட்டியது போல, அக வாழ்விலும் பெரு வெற்றி கிட்டியது. ஆம்; மனத்துக்கிசைந்த மனையாள் ஒருத்தி கிடைத்தாள். அப்பெருமாட்டியின் பெயர் பெருங் கோப்பெண்டு என்பதாகும். பாண்டியனும் அவன் மனைவியும் சரியான 'ஜோடி!' அவன் போரிற் சிறந்தவன். அவள் கல்வியிற் சிறந்தவள். இருவரும் கவிஞர். வாழ் நாளில் இந்த ஒரே போரைச் செய்து சரித்திரத்தில் இடம் பெற்றுவிட்டான் அவன். வாழ்நாளில் கடைசிநாளில் ஒரே ஒரு பாடலைப் பாடிச் சரித்திரத்தில்— இலக்கியத் தின் சரித்திரத்தில்— அழியா இடம் பெற்றுவிட்டாள் அம்மாதரசி.

காதலர் இருவரும் கருத்து ஒருமித்து வாழ்ந்தனர்; தமிழர் கண்ட அகவாழ்வை மிகச் சிறந்த முறையில் நடத்தினர். அவனுக்கும் அவளுக்கும் இன்ப துன்பங்கள் ஒன்றாகவே வந்தன. உடலளவில் அவர்கள் இருவரே. அவன் ஆண்; அவள் பெண். அரசியல் அலுவல்களைக் கவனிக்கும் பெரும் பொறுப்பு வாய்ந்தவன் அவன். அத்தனையையும் செய்யும் அவனைக் கவனிக்கும் பொறுப்பு அவளுடையதாகும்.

உடலளவில் வேறுபட்டிருந்த அவ்வீரனும் அப்புலமைப் பெருமாட்டியும் உயிரால் ஒன்றாய் இருந்தனர். மணிவாசகப் பெருமான் பாடிய திருக்கோவையார்

பாட்டிற்கு இலக்கியம் வேண்டுமானால் இவர்களைக் கூறலாம். இதோ பெருமான் கூறுகிறார்.

'காகத்து இருகண்ணிற்கு ஒன்றே
மணிகலந் தாங்குஇருவர்
ஆகத்துள் ஓருயிர் கண்டனம்
யாம் ;இன்று யாவையுமாம்
ஏகத்து ஒருவன் இரும்பொழில்
அம்பல வன்மலையில்
தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய்
வரும்இன்ப துன்பங்களே.

(திருக்கோவை, 71)

[ஆகத்துள்-உடம்புள்; 3-ஆம் அடி-உவமை இல்லாது ஒருவனாய் நிற்கும் சிற்றம்பலப் பெருமான் ஊரின் ; தோகை- தலைவி ; தோன்றல்-தலைவன்.]

இன்பமும் துன்பமும் ஒன்றாகவே அனுபவித்தனர் இருவரும். இத்தகைய சிறந்த காதலர்களைக் கண்டால் மனிதர்கட்குப் பொறாமை ஏற்படுவது இயற்கைதான். ஆனால், யமனுக்குக்கூடப் பல சமயங்களில் இந்த அற்பப் புத்தி தோன்றி விடுகிறது. கீரியும் பாம்புமாய் வாழும் கணவனும் மனைவியும் நூறு வயது வரை வாழக் காண்கிறோம். இத்தகைய சிறந்த வாழ்வு வாழ்ந்த பாண்டியனையும் அவன் மனைவியையுங் கண்டு பொறாமை அடைந்தான் யமன்.

பெருங்கோப்பெண்டின் வாழ்வைப் பாழாக்க முடிவு செய்துவிட்டான் கண்ணில்லாக் காலன் ; பூதப்பாண்டியனைக் கொண்டு சென்றுவிட்டான். ஏனைய பெண்களைப் போல அழுது அரற்றிவிட்டுக் கைம்மை நோன்பு நோற்கத் தயாராக இல்லை பெருங்கோப்பெண்டு. அவள் செய்த செயலை உடனிருந்து பார்த்த **மதுரைப் பேராலவாயார்** என்னும் புலவர்பிரான் இதோ கூறுகிறார் : 'மதுரையை அடுத்தது காடு. காளிகோயில் எதிரே பெரிய குழி

தோண்டி, அதில் பெருந்தீ மூட்டியுள்ளார்கள். தீ, சுடர் விட்டு எரிகிறது. அரசமாதேவி நீராடிவிட்டு ஈரக்கூந்தல் முதுகிற்கிடந்து புரள வருகிறாள். அவள் முகத்தில் கவலைக் குறியே காணவில்லை! ஆனால், கண்களில் மட்டும் நீர் ஆறாய்ப் பெருகுகிறது. அனைவரும் வழிவிட்டு நிற்கின்றனர். அவள் மட்டும் தனியே வந்தது இன்றுதான். 'ஒரு கண நேரம் கணவனைப் பிரியினும், உயிர் நடுங்கும் இவள், இதோ தீயில் புகுந்துவிட்டாள்!' என்ற பொருளில் புலவர் பாடினார். (புறம், 247)

தீயை வலம் வந்துகொண்டிருக்கும் அந்நிலையிற்கூடப் பல பெரியவர்களும் தலைமையமைச்சனும் அவளை அச்சத்துடன் தடுக்கின்றனர். ஏன்? பாண்டியன் பட்டத்தை ஏற்கப் பிள்ளை இல்லை. இப்பொழுது உடனே வேறு மன்னனைத் தேடிப் பட்டத்தில் வைப்பதும் இயலாத காரியம். பாண்டியர் பரம்பரையில் பெண் அரசாள்வது வியப்பொன்றும் இல்லை! அறிவாலும் கல்வியாலும் சிறந்த அரசமாதேவி ஏன் ஆட்சியை ஏற்று நடத்தக் கூடாது? அவர்கள் அரசமாதேவியின் திருவடியில் வீழ்ந்து வேண்டுகின்றார்கள். அவர்களை எள்ளல் குறிப்புடன் பார்த்து அரசமாதேவி இதோ கூறுகிறாள்:

'பல பெரியவர்களே, பல பெரியவர்களே, 'நீயும் கணவனுடன் சென்றுவிடு' என்று கூறாமல், 'உயிர் வாழ்க' எனக் கூறும் பொல்லாத சூழ்ச்சியையுடைய சான்றோர்களே, அணிலின் முதுகிலுள்ள கோடு போல் வரிகளை உடைய வெள்ளரிக்காயை வாளால் பிளக்கும் பொழுது கிடைக்கும் விதை போன்ற வெண்மையான நெய்யைக் கையிலும் தொடாமல், இலை இடையே போடப்பட்ட கைப்பிடியளவு நீருடன் கலந்த பழைய சோற்று உருண்டையை, வெண்மையான எள் துவையலுடன், புளியுடன் கலந்து சமைக்கப் பெற்ற வேளைக் கீரையைத் தொட்டுக் கொண்டு, உணவாக உண்டு, பருக்கைக் கற்கள் நிறைந்த

தரையில் பாய் இல்லாமல் படுத்து வாழும் கைம்மை நோன்பு நோற்கும் பெண்களுள் யாமும் ஒருத்தி அல்லேம். புறத்தேயுள்ள காட்டில் மூட்டப்பட்ட கரிய மரக்கட்டைகளால் ஆகிய பிணப் படுக்கை நுமக்கு அரியதாக இருக்கட்டும். எம்மைப் பொறுத்தவரை, பெரிய தோள்களையுடைய எம் கணவன் இறந்துவிட்டமையின் மொட்டில்லாமல் அனைத்தும் மலர்ந்துள்ள தாமரைத் தடாகமும் இத்தீயும் ஒன்றுதான்,' என்ற பொருளில் பாடினாள் அப்பெருமாட்டி, தீப்புகுமுன்.

'பல்சான் றீரே ! பல்சான் றீரே !
செல்கெனச் சொல்லாது ஒழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே !
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந்து அட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது
அடைஇடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்எள் சாந்தொடு புளிப்பெய்து அட்ட
வேளை வெந்தை! வல்சி யாக
பரல்பெய் பள்ளி! பாய்இன்றி வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ!
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்குஅரிது ஆகுக தில்ல ; எமக்குஎம்
பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்புஅற
வள்இதழ் அவிழ்ந்த தாமரை
நள்இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே !  (புறம். 246)

அப்பெருமாட்டியைத் தடுப்பவர் தன்னலமாகிய சூழ்ச்சியுடையவர்கள் தாம். அங்ஙனம் சூழ்ச்சி செய்தவர்களைப் 'பல் சான்றவர்களே !' என்று அழைப்பதில் எவ்வளவு கேலி நிறைந்துள்ளது ! 'எமக்குத் தீயும் தாமரைப் பொய்கையும் ஒன்று' என்று கூறுவதாலும், 'எமக்கு' என்று கூறுவதாலும் அப்பெருமாட்டி அரசரில் பிறந்து, அரசரில் வளர்ந்து, பேரரசியானவள் என்பது

தெரிகிறது. கைம்மை நோன்பு நோற்பவர்களை உயவல் (வருந்தும்) பெண்டிர் என்று கூறும் பொழுது பெருமிதம் என்னும் சுவை (காம்பீர்ய ரசம்) வெளிப்படுகிறது. அப் பாண்டியன் ஒரு வெற்றியால் என்றும் வாழ்கிறான்; இப்பெருமாட்டி ஒரு பாடலால் என்றும் வாழ்கிறாள்.

## 9. ஐயோ, யமனே!

இப்பரந்த உலகில் பலரைப் பார்க்க நேர்கிறது நமக்கு. சிலரைப் பார்க்கும்பொழுதே, சில எண்ணங்கள் மனத்தே தோன்றுகின்றன. ஒரு சிலரைப் பார்க்கும் பொழுதே, 'ஐயோ, பாவம்! இவர் எவ்வாறு உயிரைப் பிடித்துக் கொண்டு வாழ்கிறார்!' என்று எண்ணத் தோன்றுகிறது. அவர்கள் உடலமைப்பு, நடை, உடை, பாவனை ஆகியவை தாம் நம்மை இவ்வாறு எண்ணத் தூண்டுகின்றன. ஆனால், இன்னம் சிலரைக் காண்கிறோம். வழக்கமாக ஒருவரைக் கண்டவுடன், "என்ன, இளைத்திருக்கிறீர்களே!" என்று தொடங்கும் பேச்சுமுறை, இந்த இரண்டாவது வகையாரைக் கண்டவுடன் நின்று விடுகிறது. நல்ல திடகாத்திரத்துடன் இருக்கும் இவர்களைக் காணும் பொழுதே, 'சௌக்கியம்' என்பதன் பொருள் இதுதான் என்பதை அறிகிறோம்!

இத்தகைய திடகாத்திரமான உடற்கட்டு உடையவர்கள் இறக்கக்கூடியவர்கள் என்பதை நம் மனம் நம்ப மறுக்கிறது. எப்படி அவர்கள் இறக்க முடியும் என்று வியப்படைகிறோம்!

சோழன் கிள்ளிவளவன் சிறந்த உடலமைப்புப் பெற்றவன்; பெருவீரன். அவன் செய்த போர்கள் அனேகம். அந்த மாபெரும் வீரன்பால் வந்து பரிசில் வாங்கிச் சென்ற பரிசிலர்கட்கும் புலவர்கட்கும் அளவில்லை. 'ஏதோ சென்

றோம் ; பரிசிலைப் பெற்றுக்கொண்டு வந்துவிட்டோம்!' என்ற முறையில் அப்புலவர்கள் போனதுமில்லை. அவனிடம் ஆழமான நட்புக்கொண்டுவிட்டனர் அப்புலவர் பெருமக்கள் அவன் காலத்தில், அவனிடம் நட்புக்கொண்டிருந்த புலவர்கள் **ஆலத்தூர் கிழார், மாறோக்கத்து நப்பசலையார்** முதலிய பத்துப் பேர்கள். அப்பத்துப் புலவர்களுள் மாறோக்கத்து நப்பசலையார் என்பவர் பெண்பாற் புலவராவார். கிள்ளி வளவனுடைய தலைநகர் திருச்சிராப்பள்ளியை அடுத்த உறையூராகும். தமிழ் மூவேந்தருள் ஒருவனாகிய சேரனை வென்ற பெருமை அக்கிள்ளி வளவனுக்கு உண்டு.

எத்துணைப் பெரிய வேந்தனாயினும் அவன் பரிசிலர்க்கும் இரவலர்க்கும் அடையா வாயிலை உடையான் என்பது உறுதி. ஏனையோர் அவன் அரண்மனையில் நுழைய இயலாமல், காலத்தையும் அவன் உத்தரவையும் எதிர் பார்த்து நிற்கலாம். ஆனால், புலவர்களும் பாணர்களும் அவன் ஆணையை எதிர் பாராமலே உள்ளே நுழைந்து அவனைக் காணலாம்.

மாறோக்கத்து நப்பசலையார் என்ற புலவர் பெருமாட்டியார் கிள்ளி வளவன் நண்பருள் ஒருவர். அவனுடைய அரண்மனையுள் புலவரும் பரிசிலரும் உத்தரவின்றி உள்ளே நுழைவதைப் பல முறை கண்டிருக்கிறார் அவர். அவருக்கு ஓர் ஐயம் எழுந்ததுண்டு. பகைவர்களும் இப்படிப் புலவர் போலவும் பாணர் போலவும் உள்ளே நுழைந்துவிட்டால் என்ன செய்வது! தம் அருமை நண்பனாகிய கிள்ளிக்கல்லவோ அது பெருந்தீமை! பல நாள் புலவர் பெருமாட்டியார் இது பற்றிச் சிந்தித்தார். இறுதியாக ஒருநாள் கிள்ளியிடம் தம் மனத்தில் உண்டான அச்சத்தைக் கூறிவிட்டார். கிள்ளி வாய் விட்டுச் சிரித்து விட்டான்.

'புலமைச் செல்வியீர், அஞ்ச வேண்டா. தம் வீரத்தையும் மானத்தையும் காற்றில் பறக்க விட்டுவிட்டு,

வஞ்சகமாகப் பரிசிலரைப் போல உள்ளே நுழையும் பகைவர் தமிழ் நாட்டில் இலர். ஒரோவழி வெளி நாட்டிலிருந்து வருவார்களாயின், அவர்கள் நடையுடை முதலியவற்றிலிருந்து அவர்களை அறிந்துகொள்ளலாம். ஆதலின், உம் நண்பனாகிய எனக்குத் தீங்கு நேரும் என்று அஞ்ச வேண்டா!' என்று அவன் அப்புலவருக்கு அமைதி கூறினான்.

மாதங்கள் சில சென்றன. நப்பசலையார் எங்கோ ஓர் ஊரில் சுற்றிக்கொண்டிருந்தார். அந்தத் துயர் மிகுந்த செய்தி அவர் காதுக்கு எட்டிற்று, கிள்ளி வளவன் இறந்துவிட்டான், 'குளமுற்றம்' என்ற ஊரில் தங்கி யிருக்கும் பொழுது என நப்பசலையாருக்கு ஆறாத்துயரம் பெருகியது. கடைசி முறையாகக் கிள்ளி வளவனைச் சந்தித்த பொழுது பேசிய பேச்செல்லாம் நினைவுக்கு வந்தன. பரிசிலர் போல் வேடமிட்டு வந்தால் ஒழிய அவனை யாரும் அனுக முடியாதே! அந்த யமன் எவ்வாறு வளவனை அணுகினான்? அவன் வழக்கமாக ஏறிச் செல்கின்ற வாகனத்தில் ஏறிக் கையில் பாசக் கயிற்றை ஏந்திச் சென்றிருந்தால், அவன் பாடு திண்டாட்டந்தான். கிள்ளி வளவன் எதிரே தன் சுய வடிவுடன் செல்வதற்கு யமனுக்கு என்ன, பைத்தியமா பிடித்திருக்கிறது? எப்பொழுதும் பிறர் உயிரைக் கவர்ந்து செல்லும் தொழிலுடைய அந்த யமனுக்குத் தன உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வழி தெரியாதா, என்ன! உறுதி யாக அவன் கிள்ளியின் எதிரே சென்றிருக்க மாட்டான். எதிரே செல்லாமல், பின்புறமாகக் கோழையைப் போலச் சென்று, கிள்ளியின் உயிரை ஒருவேளை கவர்ந்திருப் பானோ! இல்லை! இல்லை! அப்படிச் செய்திருக்க மாட்டான். எதிரேதான் சென்றிருப்பான்; ஆனால், வழக்கமான தன் கோபத்தையும் வீரத்தையும் காட்டிக் கொண்டு சென்றிருக்க மாட்டான். அவற்றிற்குப் பதிலாக...? ஆம்! இப்பொழுது புரிந்துவிட்டது அவன்

செயல்! இரவலரைப் போல, பரிசில் வேண்டுபவரைப் போல, கிள்ளியின் முன்னர்ச் சென்று வேண்டியிருப்பான். அவனிடம் இரக்கம் கொண்ட கிள்ளி, 'என்ன வேண்டும்?' என்று கேட்டிருப்பான். 'உன்னுடைய உயிர்தான் வேண்டும்,' என்று அந்தக் காலன் கேட்டிருப்பான். பரிசில் மக்கள் எதனை வேண்டினாலும்— ஆம்! உயிரையே வேண்டினாலும்— மறுப்பவன் அல்லன் கிள்ளி வளவன். எனவே, யமனுக்கு உயிரைப் பரிசிலாக— அல்ல பிச்சையாக— ஈந்து விட்டான். இவ்வாறு நப்பசலையார் என்ற அப்பெண்மணியார் நினைந்து, அந்நினைவை ஒரு பாடலாக வடித்தார்.

**'செற்றன் றாயினும் செயிர்த்தன் றாயினும்**
**உற்றன் றாயினும் உய்வின்று மாதோ!**
**பாடுநர் போலக் கைதொழுது ஏத்தி**
**இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்**
**மண்டுஅமர் கடக்குந் தானைத்**
**திண்டேர் வளவன் கொண்ட கூற்றே!'** (புறம். 226)

[செற்றன்றாயினும்—மனத்துள் கறுவு கொண்டாயினும்; செயிர்த்தன்றாயினும்—வெளிப்படக் கோபித்ததாயினும்; உற்றன்றாயினும்—உடம்பைத் தொட்டாயினும்; உய்வின்று—அந்த யமன் பிழைத்திருக்க மாட்டான்; பொலந்தார்—பொன்னாலாய மாலையை அணிந்த.]

கிள்ளிவளவனைக் கொண்டுபோன யமன் அவன் உயிரைப் பிச்சைக்காரர்போல வேண்டித்தான் பெற்றிருக்க வேண்டும். ஐயோ, யமனே! இரக்கம் அற்றவனே! கிள்ளியின் சாவைக் கேட்டறிந்த ஆவடுதுறை மாசாத்தனார் என்ற மற்றொரு புலவர் யமனை மூட்டாள் என்று கூறுகிறார். ஏன் தெரியுமா? எந்தப் பைத்தியக்காரனாவது விதை நெல்லைச் சமைத்து உண்பானா? இந்த யமன் சாப்பிட்டு விட்டானே! கிள்ளிவளவன் உயிரோடு இருக்

கும் வரை தினம் ஆயிரக்கணக்கானவரைப் போரில் கொன்று யமனுக்கு விருந்திட்டான். ஆனால், கிள்ளியை இன்று கொண்டு போன கூற்றுவன் பைத்தியக்காரன் அல்லனோ ?

**'நனிபே தையே ! நயனில் கூற்றம் !**
**விரகு(தந்திரம்) இன்மையின் வித்துஅட்டு உண்டனை !'**

(புறம். 227)

என்று கூறித் தன் வருத்தத்தை வெளிப்படுத்துகிறார்.

இந்தப் பாழும் யமன் சில சமயங்களில் செய்கின்ற காரியம் எத்துணைப் பேர் தலையில் விடிகிறது, தெரியுமா? அவன் நினைக்கிறான், ஒருவனுடைய உயிரை மட்டும் கவர்ந்து செல்வதாக. ஆனால், அந்த ஒருவன் சாதாரண மனிதனாய் இருந்துவிட்டால் கவலை இல்லை. அவ்வா றில்லாமல், சில சந்தர்ப்பங்களில் ஒருவனை நம்பி ஆயிரக் கணக்கானவர் வாழ நேரிடுகிறது. அத்தகைய சந்தர்ப்பங் களில், ஆணி வேர் போல இருக்கும் அந்த ஒருவனை யமன் கொண்டுபோகும் பொழுது ஆயிரக்கணக்கானவரும் உயிர் போவதைவிட அதிகம் துன்புறுகின்றனர். உயிர் போய் விட்டால் கூடத் தொல்லை இல்லை. அதைவிட அதிகம் துன்பம் தருவதாகும் இருந்துகொண்டு அல்லல் படுவது. ஐயோ, யமனே ! இந்த உண்மை தெரிகிறதில்லையே உனக்கு !

**அதியமான் நெடுமான் அஞ்சியை** நாம் அறிவோம். அவனுக்கு உற்ற நண்பர் ஔவையார். அதியமான் இறந்த பொழுது பாட்டியார் வருந்திப் புலம்புகிறார். ஏனை யோர் போலப் பாட்டியாரும் அதியனின் பிரிவுக்கு வருந்தத் தொடங்கினார்.

தம்முடைய உயிர் நண்பனாகிய அதியன் போய்விட்ட மையின் தமக்கு ஏற்பட்ட பெருநட்டத்தை நினைத்துப் பாடத் தொடங்கினார். அதனையடுத்து அவனுடைய

சிறந்த பண்பாடு நினைவிற்கு வந்தது. உடனே அவர் மனம் அப்பெரு மகனுடைய சாவு தமக்கு மட்டும் நட்டம் அன்று என்பதை உணர்த்திற்று.

சாதாரண மனிதர் தம்முடைய நட்டத்தையே பெரிதெனக் கருதி வருந்துவர். கவிஞராகிய ஔவையார் மனம் இச்சிறிய கூட்டிலிருந்து விடுபட்டுப் பரந்த உலகைக் காண்கிறது. ஒருவன் இறந்துவிட்டதால் எத்துணைப் பேருக்கு நட்டம்! ஆ! பாடிச் சென்று பரிசில் பெறுவதையே வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்ட பாணர் கூட்டம் இனி எங்கே செல்லும்! அதியமான் மார்பில் வேல் பாய்ந்து இறந்தான். அவன் மார்பில் மட்டுமா அவ்வேல் பாய்ந்தது? பாணர்கள் கையில் வைத்துள்ள பிச்சைப் பாத்திரத்திலும் அவ்வேல் தைத்ததாம்; அப்பாத்திரத்தைத் தாங்கிய கையிலும் தைத்ததாம். அம்மட்டோ? இரப்பவர்களை மட்டும் அவ்வேல் கொல்லவில்லை. அவன் சுற்றத்தார் கண்களில் உள்ள மணி போன்றவன். எனவே, அக்கண்மணியையும் தாக்கிற்று. அத்துடன் நிற்கவில்லையாம் அப்பாழும் வேல்! அழகிய சொல்லை ஆராய்ந்து பாடும் புலவர்கள் நாவிலும் சென்று தைத்ததாம்!

இத்துணைப் பேரையும் உயிர் வதை செய்தது அதியமான் மார்பில் தைத்த வேற்படை. இக்கருத்து, பாட்டியார் பாடலில் கிடைக்கிறது.

'அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல்நுண் தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத்து இயங்கிய வேலே!'

[அருந்தலை—பெரிய தலையையுடைய; அகன் மண்டை—பெரிய தலையுமாம்; புரப்போர்—சுற்றத்தா அருநிறம்—அரிய மார்பு]

அதியமான் சாவால் நாட்டுக்கு நேர்ந்த நட்டத்தை அடுத்த அடிகளிற் கூறுகிறார் பாட்டியார்.

**'இனிப்பாடுநரும் இல்லை,**
**பாடுநருக்கு ஒன்று ஈகுநரும் இல்லை!'**

என்பதே அவர் கண்ட அவல முடிவு. ஒருவன் உயிரைக் கவர்ந்த யமன் தமிழ் நாட்டில் ஒரு பெரும் பஞ்சத்தை உண்டாக்கி விட்டான் என்கிறார் பாட்டியார். ஐயோ, யமனே! உன் அறிவும் நீயும்!

## 10. வெண்ணிக் குயத்தியார் சொல் வன்மை

**சொ**ல்வன்மை என்பது அனைவருக்கும் வாய்க்கும் ஒன்றன்று. எத்துணைச் சிறந்த அறிவுடையாரும், சொல் வன்மை இன்றேல், அவர் தம் அறிவு விளக்கத்தைப் பிறர் அறிய இயலாமல் போய்விடும். ஆசிரியர் வள்ளுவர் இது பற்றி ஓர் அதிகாரமே வகுக்கின்றார். 'நா நலம்' என்று கூறப்படும் இது.

சொல்லுக்கு உள்ள பலவகை ஆற்றலையும் நன்கு அறிந்து, சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு தக்க சொல்லால் தன் கருத்தை வெளியிடுதலையே சொல் வன்மை என்று பெரியோர் குறித்தனர். அதிலும், கவிதையில் சொல் வன்மையைக் காட்டுவது இன்னும் சிறப்புடையது. 'சிறந்த சொற்களால், சிறந்த பொருளைச் சிறந்த முறையில் பாடுவதே கவிதை,' என்பர் திறனாய்வாளர் (Gritics.)

சில சந்தர்ப்பங்களில் ஒருவன் விரும்பாதவற்றைக் கூட அவன் எதிரே கூற வேண்டிய இன்றியமையாமை ஏற்படும். அவன் மனம் நோவாமல் கூறும் சிறப்பே சொல் வன்மையின் பாற்படும். **வெண்ணிக் குயத்தியார்**

என்பவர் ஒரு பெண்பாற்புலவர் ; வெண்ணி என்ற ஊரில் குயவர் குடியிற் பிறந்தவர். அவருடைய இயற்பெயர் எது என்று அறிய முடியாதபடி குடிப்பெயரே அவருக்கு வழங்கிவிட்டது. அப்புலவர் பெருமாட்டியார் பாடிய பாடல்களுள் இன்று நமக்குக் கிடைப்பது ஒரே ஒரு பாடல் தான். இவ்வளவு சிறந்த பாடல் பாடப் பழைய அனுபவம் நிரம்பத் தேவை. எனவே, அவர் பல பாடல்கள் பாடியிருத்தல் வேண்டும். ஆனால், நம் முன்னோர்கள் கவனக் குறைவால் பல ஆயிரம் பாடல்கள் அழிந்தன வாதலின், அவற்றுள் அவருடையனவும் சில அழிந்திருத்தல் கூடும்.

தாம் பாடிய ஒரே பாடல் இன்று இருப்பவும், அப்புலவர் அதன் சிறப்பால் இலக்கிய உலகில் ஒரு சிறந்த இடம் பெற்று வாழ்கிறார். அவரால் பாடப்பெற்றவன் கரிகால் வளவன். சோழப் பேரரசர்களுள் சிறந்தவனாக மதிக்கப் பெறும் அவன் வெண்ணிப்பறந்தலை என்ற ஊரில் சேரமான் பெருஞ்சேரலாதன் என்ற சேர மன்னனுடன் பொருதான். கரிகாலன் வாழ்விலேயே இத்தகைய கடும்போர் நடைபெற்றதில்லை எனலாம். இருவரும் சிறந்த வீரர் ; இருவர் படைகளும் தமிழ்ப் படைகள். எனவே, வெற்றி தோல்விகள் காண முடியாத படி போர் நடைபெற்றது. இறுதியில் கரிகாலன் எறிந்த வேல் ஒன்று, சேரமான் மார்பில் குத்தி முதுகுப்புறம் வெளிப்பட்டு விட்டது.

அந்நாளில் தமிழ் வீரர் தம் முதுகில் புண் படுதலை விரும்பார் ; 'புறப்புண்' என்ற பெயருடைய முதுகுப்புண் பெறுவதைவிடப் போர்க்களத்தில் தங்கி நின்று உயிரையே விடுவர். என்றாலும், சேரலாதன் முதுகில் புண்பட்டு விட்டது. புறமுதுகு காட்டி ஓடும் பொழுதுதானோ முதுகில் காயமேற்படும் ? எனவே, முதுகுப்புண்ணை, அது எக்காரணத்தால் ஏற்பட்டாலும், தமிழர் வெறுத்தனர்.

சேரலாதன் மார்பிலேதான் வேல் பாய்ந்தது. எனினும், அது முதுகைத் துளைத்துக்கொண்டு வெளிப்பட்டு விட்டதாதலின், முதுகுப்புண் இருப்பதை விரும்பாத சேரன், அதனை வெறுத்தான். போரிலும் தோல்வியே கிட்டியது சேரனுக்கு. அதனால், இம்முதுகுப் புண்ணுடன் ஊர் திரும்ப விரும்பவில்லை சேரன். உடனே வடக்கு இருக்க உறுதி பூண்டுவிட்டான்.

தம் வாழ்நாளில் ஒரு பழி வந்து சூழ்ந்து விடுமேயாயின், அதனைப் பொறுக்கலாற்றாத அந்நாளைய தமிழர், தற்கொலையும் புரியத் துணிவர். ஆனால், கருவி கொண்டு உயிரைப் போக்குவதைக் காட்டிலும் சிறந்த வழி ஒன்றையும் மேற்கொண்டனர். அதாவது, தருப்பைப் புல்லை அடுக்கி, அதன்மேல் வடபுறம் நோக்கி அமர்ந்து, ஊண் உறக்கம் முதலியவற்றை நீக்கி, ஒரே சிந்தனையுடன் இருத்தலாகும். உணவு, நீர், உறக்கம் முதலியவை இன்மையின் ஊன் வாட, உடம்பு நைய, கொஞ்சம் கொஞ்சமாக, அங்குலம் அங்குலமாக உயிர் பிரிந்து செல்லும். இறுதியில் உயிர் போய்விடும். இவ்வாறு இருந்து உயிர் விடுதலையே வடக்கிருத்தல் என்பர்.

சேரமான் தன் முதுகுப் புண்ணிற்கு நாணி, வடக்கு இருக்க முடிவு செய்துவிட்டான். அவனுடைய நண்பர்களாகிய கழாஅத் தலையார், வெண்ணிக் குயத்தியார் போன்ற புலவர் பலரும் அவனைத் தடுத்தும், அவன் தன் உறுதிப்பாட்டில் தளரவில்லை; வடக்கிருந்து உயிரையே விட்டு விட்டான்.

இது இவ்வாறாக, கரிகாலன் சேரனுடைய வீரத்தைப் போர்க் களத்திலும் கண்டான். தன் மேல் குற்றம் இல்லாமல் இருப்பவும், குற்றம் செய்தவனைப் போல நாணி வடக்கிருந்து உயிரையே விடும் உறுதி படைத்தவன் ஆயினான் சேரன். எனவே, சேரனுடைய அறவீரம், மறவீரம் என்ற இரண்டையும் நேரிற் பார்த்தவனாகிய

சோழன், அச்சேரன் மாட்டுப் பெருமதிப்புக் கொண்டிருத்தல் வேண்டும். அவ்வாறு கொள்ளாமல், அவனை மதிப்புக் குறைவாக நினைத்தனன் போலும்! அரசர்க்கரசனாகிய கரிகாலனே இவ்வாறு பிழை செய்தால், யார் அவன் பிழையை எடுத்துக்காட்டுவது ?

இந்நிலையில் கரிகாலன் இறந்துவிட்ட சேரனை நன்கு மதியாமல் இருக்கிறான் என்ற செய்தி வெண்ணிக்குயத்தியாருக்கு எட்டிற்று. அவருடைய ஊரில் நடைபெற்ற போராதலின், அவர் நேரே கண்டிருந்தார் சேரன் வீரத்தை ; கரிகாலன் வெற்றி எக்களிப்பால் செய்யும் தவற்றை அவனுக்கு எடுத்துக்காட்ட விரும்பினார் ; அவனுக்கு நேரே, அவனிடம் சென்று தம் சொல் வன்மை அனைத்தையும் பயன்படுத்தி ஒரு கவிதையே புனைந்தார் ; கரிகாலனையும் புகழ்ந்தார் அப்பாடலில். ஆனால், சேரனையும் புகழ்ந்தார் அதே பாடலில்.

'குளிர்ந்த பெரிய கடலினிடத்துக் கப்பற்படையைச் செலுத்தி வெற்றி பெறுதற்காகத் தனக்கு மதம் கொண்ட பகையாய் இருந்த காற்றைக்கூடத் தனக்கு உதவியாகச் செய்துகொண்டு வெற்றி பெற்ற சோழன் மரபில் உள்ளவனே ! யானைப் படையையுடைய கரிகால் வளவனே ! போரில் எதிர் சென்று தாக்கி, ஆற்றலைப் புலப்படுத்தும் முறையில் வெற்றியையும் பெற்றவனே ! உன்னைக் காட்டிலும் நல்லவன் அல்லனோ, நிறைந்த புதிய வருவாயினையுடைய வெண்ணிப் பறந்தலையில் மிகுந்த புகழையுடைய தேவருலகத்தை அடைவான் வேண்டிப் புறப் புண்ணுக்கு வெட்கி வடக்கிருந்தவன் ?' என்ற பொருளில் பாடினார் :

**'நளிஇரு முந்நீர் நாவாய் ஓட்டி**
**வளிதொழில் ஆண்ட உரவோன் மருக !**
**களிஇயல் யானைக் கரிகால் வளவ !**
**சென்றுஅமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற**

**வென்றோய்! நின்னினும் நல்லன் அன்றே,**
**கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**
**மிகப்புகழ் உலகம் எய்திப்**
**புறப்புண் நாணி வடக்குஇருந் தோனே?'**

*(புறம். 66)*

*சோழன் ஒருவன் கடலில் வீசும் காற்றைக் கூடத் தனக்கு விருப்பமான முறையில் வீசுமாறு செய்தானாம். இதுவே முதலிரண்டு அடிகளில் கூறப்பெற்ற செய்தி. இதனை அப்புலவர் வேண்டுமென்றே குறிக்கிறார் என்று நினைக்க வேண்டியுள்ளது.*

*அதனால், கரிகாலன் வெற்றியை அப்புலவர் பாராட்டாமல் விடவும் இல்லை. 'நின் ஆற்றல் தோன்ற வென்றோய்!' என்ற அடியால் கரிகாலனுடைய வீரத்திற்குரிய மதிப்பைத் தருகின்றார். ஆனால், வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வரும் இவ்வுலகில், ஒருவன் ஏன் இவ்வளவு தூரம் தன்னைப் பற்றி உயர்வாக நினைத்து கொள்ள வேண்டும்? தன்னைப்பற்றி வேண்டுமானால் எவ்வளவு உயர்வாக வேண்டுமானாலும் நினைந்துக் கொண்டு போகட்டும்; ஆனால், பிறரைப்பற்றி மதிப்புக் குறைவாக நினைக்கலாமா? அது பெருந் தவறு ஆயிற்றே! இத்தகைய தவறான செயலைக் கரிகாலன் போன்ற பெருவீரர் செய்யலாமா? இவ்வாதம் அம்மையார் மனத்தில் முகிழ்த்தது. எனவே, அவர், 'நின்னினும் நல்ல வன் அன்றே அவன்?' என்ற பெரிய குண்டைப் போடு கிறார்.*

*நல்லவன் என்று கூறப்படுவதற்கும், 'வீரன்' என்று கூறப்படுவதற்கும் வேறுபாடு உண்டு. கரிகாலனைக் காட்டிலும் சேரலாதனை வீரன் என்று புலவர் குறிப்பிட வில்லை என்பது கவனித்தற்குரியது. கரிகாலன் எவ் வாறு வெற்றி பெற்றான்? படை வீரரின் துணை கொண்டும், தன் தோள் வலிமை கொண்டும் வெற்றி*

பெற்றான். அந்த அளவுக்கு அது பாராட்டற்குரியதே. ஆனால், அவனுடைய வெற்றி இரத்தம் தோய்ந்தது ; அதிலும் பல்லாயிரக்கணக்கானவருடைய குருதி தோய்ந்தது என்பதில் ஐயமில்லை. பலர் குருதியைத் தன்னுடைய வெற்றியின் பொருட்டு ஓட விடுபவனை நல்லவன் என்று எவ்வாறு குறிப்பது ? வீரன், மறமுடையவன், அஞ்சா நெஞ்சன் என்று எத்தனை பெயர்கள் வேண்டுமானாலுங் கூறலாம் ; ஆனால், நல்லவன் என்ற பெயரைக் கொடுக்க முடியாது !

பண்பாடு ஒன்று பற்றித்தான் நல்லவன் என்ற பெயரை எடுத்தல் கூடும். தன் வெற்றி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு, அதன் பொருட்டு ஆயிரக் கணக்கானவரைப் 'பலியிடும் ஒருவனைப் பண்பாடுடையவன் என்று கூறல் இயலுமா ? இயலாது. எனவே, புலவர் இருவரிடத்தும் உள்ள இயல்புகளை எடை போடுகிறார். 'உன்பால் வெற்றி உள்ளது; சேரன்பால் பண்பாடுள்ளது,' என்கிறார்.

இதனை வலியுறுத்துவார் போல 'வளி தொழிலாண்ட உரவோன் மருக' என்றும் குறிப்பிடுகிறார். போரில் வெற்றி பெற வேண்டும் என்பதற்காக இயற்கையினைக் கூடக் கட்டுப்படுத்த முயன்றனன் சோழன் முன்னோன் ஒருவன். அது சிறந்த செயலாயினும், தன்னலத்தைக் கருதியது என்பதை யாரே மறுக்க வல்லார் ? தன்னுடைய வெற்றியையே பெரிதாகக் கருதி, அதன் பொருட்டுக் காற்றைத் திசை மாறி வீசச் செய்தவன் மரபில் வந்தவனை 'வீரனே' என்று புகழ்தல் பொருத்தமே ! ஆனால், நல்லவன் என்று பெயர் பெற யாது செய்தான் அவன் ? பிறனுடைய நற்பண்பைக் கூட அறிய மாட்டாமல் அவனைத் தவறாக நினைத்தவனை எவ்வாறு பண்புடையவன் எனக் கூறுவது ?

இதன் மறுதலையாகச் சேரனை எடுத்துக் கொள்வோம். அவன் கடமை என்ற முறையில் போரிட்டான்.

போரில் வெற்றி கிட்டவில்லை. அது அவனுடைய வீரத்தில் குறைவு ஏற்படுத்தலாம். ஆனால், மானம் போகிற சூழ்நிலை என்று தான் கருதிய ஓரிடத்தில் உயிரைப் பெரிதென அவன் மதிக்கவில்லை. பல வகைகளில் அப்புண்ணுக்கு அமைதி கூறலாம்.

அவன் புறப்புண்ணைப் பழி கூறுவார் யாரும் இலர். ஆனாலும், நாணமடைந்தான் சேரன். நாணத்தால் தன் உயிரை— கரிகாலனும் போக்க முடியாத தன் உயிரை— தானே போக்கிக் கொண்டான். இன்னும் கூறப்போனால், போர்க்களத்தில் உயிரை விடுவதைக் காட்டிலும், வடக்கிருந்து உயிரைவிட அதிக வீரம் வேண்டும். நாணம் பெரிதெனக் கருதியமையின், அவனைச் சோழனைக் காட்டிலும் நல்லவன் என்று கூறிவிட்டார் வெண்ணிக்குயத்தியார்.

போரில் வென்றவனையே பெரிதும் பாராட்டிப் புகழ் பாடும் இவ்வுலகில், தோற்றவன் பெருமையைப் பாடின பெருமை ஒரு பெண் புலவரையே சாரும். அதிலும் வென்றவன் எதிரே சென்று, தோற்றவன் பெருமையைப் பாடினார். இதிலும், இருவரையும் ஒப்பிட்டுப் பாடினார்; அதிலும், தோற்றவன் வென்றவனைக் காட்டிலும் மிக நல்லவன் என்று பாடினார்.

ஆம்! இத்தகைய முறையில் கரிகாலனுக்கு அறிவு கொளுத்தியவர் வேறு யாரும் இலர்! அதிலும் அப்பெருமை வெண்ணிக் குயத்தியாருக்கே தகும். யாருக்கும் பயன்படாமல் வீணாகின்ற மண்ணை எடுத்து, அனைவருக்கும் பயன் படக்கூடிய பாண்டங்களாகச் செய்யும் பண்புடைய குடியிற் பிறந்த பெருமாட்டியார் அல்லரோ அவர்? எனவே, அகங்காரத்தால் அழியும் நிலைக்கு வந்துவிட்ட சிறந்த வீரனாகிய கரிகாலனுக்குத் தம் ஒப்பற்ற சொல் வன்மையினால் நல்லறிவு உண்டாகுமாறு செய்த பெருமை வெண்ணிக் குயத்தியாருக்கே உரியது.

வெண்ணிப் பறந்தலையில் நடந்த போர்தானே கரிகாலனைக் கர்வங் கொள்ளச் செய்தது? அம்மண்ணி லேயே பிறந்த வெண்ணிக்குயத்தியார் அவனுக்கு நல்லறிவு புகட்டினார். அவனுக்குக் கர்வத்தைத் தந்த அவ்வூர் மண், அக்கர்வத்தைப் போக்கும் மருந்தாம் அம்மையாரை யும் தந்து புகழ் பெற்றது.

## 11. வெள்ளி வீதியார்

சங்க காலத்தில் வாழ்ந்த பெண்பாற் புலவர்களுள் வெள்ளிவீதியாரும் ஒருவர். இன்று நம் காதுகட்கு இனிக் காத 'பேய் மகள் இளவெயினி' போன்ற பல பெயர்கள் வைக்கப் பெற்ற அந்தக் காலத்தில், இவ்வளவு அழகான பெயரைப் பெற்றிருந்த அப்பெருமாட்டியார், பதின்மூன்று பாடல்கள் பாடியுள்ளார்.

அனைவரும் அறியும் ஔவைப் பிராட்டியாருக்கும் காலத்தால் முற்பட்டவர் அவர். ஔவையார் பாடிய அகப்பாடல் ஒன்றில் வெள்ளி வீதியாரைக் குறிக்கின்றார். 'அறு கோட்டு உழைமான் ஆண்குரல் ஆர்க்கும், நெறிபடு கவலை நிரம்பா நீளிடை, வெள்ளி வீதியைப் போல நன்றும் செலவயர்ந் திசினால் யானே' (அகம். 147) என்று குறிப்பிட்டிருக்கிறார் அவர். 'அறுக்கப்பட்டவை போல உள்ள கொம்புகளை உடைய பெண் மான், தன்னுடைய ஆண் மானின் குரலைக் கேட்கக் காதுகளைத் திருப்பிக் கவனிக்கின்ற கவர்த்த வழிகளில், வெள்ளிவீதி யைப் போல யானும் நீண்ட தூரம் சென்றதுண்டு,' என்று ஔவையாரே குறிப்பிட்டிருக்கிறார் என்பது அறிதற்குரியது.

பல காலம் பல ஊர்களிலும் சுற்றித் திரிந்த அவர், பல பாடல்களையும் பாடியிருத்தல் கூடும். ஆனால், எந்த மன்னனுடைய காலத்தில் வாழ்ந்தார் என்று கூட அறிய

முடியவில்லை. அவர் பாடின புறப் பாடல்களுள் ஒன்றும் இன்று கிடைக்கவில்லையாகலின். ஆனால், அகத்துறைப் பாடல்கள் பதின்மூன்று அவர் பாடியவையாக இன்று கிடைத்துள்ளன. அவை அகநானூற்றில் இரண்டும், குறுந்தொகையில் எட்டும், நற்றிணையில் மூன்றுமாகத் தொகுக்கப் பெற்றுள்ளன.

காதல் சுவை பற்றிப் பெரும்பாலும் ஆண் மக்களே பாடிய பாடல்களைக் காண முடிகிறது. சில சந்தர்ப்பங் களில்தான் பெண்பாற்புலவர்களுடைய பாடல்கள் மூலம் இச்சுவையைப் பற்றி அறிய முடிகிறது. அவ்வாறு இன்பச் சுவையைப் பற்றிப் பாடிய புலவர்களுள் வெள்ளி வீதியா ரும் ஒருவர். தாம் ஒரு பெண்ணாயும் புலவராயும் இருந்து பாடியுள்ளமையின், பெண்டிர் மனநிலையை அறிய அவர் பாடல்கள் மிகவும் உதவுகின்றன.

தலைவனைப் பிரிந்து நிற்கும் தலைவியின் உடம்பில், பசலை நோய் என்ற ஒன்று பரவி விடுமாம். உடம்பில் உள்ள ஒளி மறைந்து விடுவதைத்தான் இவ்வாறு அந் நாளில் குறிப்பிட்டனர் போலும்! கவிஞர்கள் தம்மைத் தலைவியாகப்பாவித்துக் கொண்டு பாடிய பாடல்களி லும், இப்பசலை மிகுதியாகப் பேசப்படுகிறது. தம் முடைய அழகைக் கெடுக்கிறது என்றும், தம் காதல் நோயைப் பிறர் அறிந்து கொள்ள ஏதுவாக உள்ள தென்றுந்தான் கவிஞர்கள் பாடலில் கூறுவர். ஆனால், வெள்ளி வீதியார் பெண்ணாதலின், வேறு விதமாக இதனைப் பேசுகிறார்.

நல்ல பசுமாட்டின் பால் எவ்வாறு பயன்பட வேண்டும்? தூய்மையான பாத்திரத்தில் கறக்கப்பட வேண்டும்; அவ்வாறு இல்லையானால், அம்மாட்டின் கன்று அப்பாலை உண்ணவேண்டும். கலத்தில் கறக்கப் பட்டால் மக்கட்குப் பயன்படும். கன்று குடித்து மகிழ்ந்

தால், அது செழிப்பாக வளர ஏதுவாகும். இரண்டும் இல்லாமல், அப்பசுவின் பால் நிலத்தில் முற்றும் சிந்தி விட்டால், அது எவ்வளவு வருந்தத்தக்க செயல் !

அதே போல, தலைவியிடம் அழகு என்ற ஒன்று குடிபுகுந்துள்ளது. அந்த அழகு அவளிடம் இருந்தால் அவளுக்கு இன்பம் பயக்கும். இல்லாவிடில், அவளுடைய தலைவன் அதனை அனுபவிக்க வேண்டும். அவனுக்குப் பயன் படுவதே முதலாவது சிறப்பு. அது இயலவில்லையாயின், அவளுக்காவது பயன்பட வேண்டும்.

அழகு படைக்கப்பட்டதன் அடிப்படை நோக்கமே இவை இரண்டில் ஒன்று நிறைவேற வேண்டும் என்பது தானே ! ஆனால், இரண்டும் நிறைவேறாமல் மூன்றாவது ஒன்று நடைபெற்றால், அதைப்பற்றி என்னவென்று கூறுவது ! பாத்திரத்தில் கறக்கப்படாமலும், கன்று உண்ணாமலும், பால் நிலத்தில் வீணே ஊற்றப்பட்டது போல, தலைவியின் அழகைத் தலைவன் பயன்படுத்தாமல் இருக்க, மூன்றாவது ஒன்று அவளுடைய அழகை வீணாகச் செய்கிறது. அது யாது ? அதுவே பசலை நோய் என்பதாகும். இதோ வெள்ளி வீதியார் பாடுகிறார் :

**'கன்றும் உண்ணாது, கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துஉக் காஅங்கு
எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது
பசலை உணீஇயர் வேண்டும்
திதலை அல்குல் என் மாமைக் கவினே !** (குறுந். 27)

[நல் ஆன்—நல்ல பசு ; உக்காங்கு—கொட்டியது போல ; என்னைக்கும்—என் தலைவனுக்கும் ; மாமைக் கவினே—மாமையாகிய அழகு]

தலைவியின் உள்ளத்தைத் திறந்து காட்டும் முறையில் அமைந்துள்ளது இப்பாடல். தலைவன் களவொழுக்கத்தில் வந்துகொண்டிருந்தவன், திடீரென்று வருவதை நிறுத்தி

விட்டான். அவன் வரவை நினைத்து நினைத்து வருந்திய தலைவிக்கு இப்பொழுது உணவு மறுத்து உறக்கமும் கெட்டது. இவை இரண்டும் கெட்டவுடன் உடலிலுள்ள அழகும் கெட்டுப் பசலை நிறம் படர்ந்து விடுகிறது.

இந்நிலையில் தலைவன் வாராது விட்ட கொடுமையைப் பற்றித் தலைவி பாடியிருப்பினும் குறை கூறுவதற்கில்லை. உண்மையில் அவன் செய்தது தவறு தான்! என்றாலும், தமிழ் நாட்டுப் பெண்கள் தம்முடைய தவக் குறைவை எடுத்துப் பேசுவரே தவிர, தலைவன் குறையை எடுத்துப் பேசுவதில்லை, அந்த நாட்களில்!

இங்கே வெள்ளி வீதியார் தம்முடைய கவலையை எவ்வளவு அழகாக வெளியிடுகிறார்! தம்முடைய உடம்பு கெடுவது பற்றியும், அழகு அழிவது பற்றியும் ஒன்றும் கவலை இல்லை. ஆனால், அந்த அழகு பயன்பட வேண்டியவர்கட்குப் பயன்பட்டு, அதனால் அழிவதானால் எவ்வளவு நன்றாக இருக்கும்! 'ஆண்டவனால் படைக்கப் பட்ட அழகு, இவ்வாறு பசலையால் உண்ணப்பட்டு அழிய வேண்டுமா?' என்று கேட்கும் பொழுது அவருடைய வருத்தத்தின் ஆழத்தை ஒருவாறு அறிய முடிகிறது.

எல்லையற்ற துயரத்தில் ஆழ்ந்துள்ளாள் தலைவி என்பது, பாட்டைப் படித்தவுடன் அறிந்து கொள்ள முடிகிறது. இம்மனநிலையில், தலைவன் மேல் குறை கூறினாலும் யாரும் அதில் தவறு காணமாட்டார்கள். இருந்தாலும், பண்பாடு நிறைந்த அத்தலைவியின் உள்ளம் யார் பேரிலும் தவறு காண மறுக்கிறது!

இதே போன்ற ஒரு மன நிலையை நம் காலக் கவிஞரான பாரதியார் பாடுகிறார்:

**'நல்லதோர் வீணைசெய்தே— அதை**
**நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ?**
**சொல்லடி சிவசக்தி! — என்னைச்**
**சுடர்மிகும் அறிவுடன் படைத்துவிட்டாய்!'**

என்று கவிஞர் தம் மன வருத்தத்தை வெளியிடுகிறார். 'சுடர் மிகும் அறிவுடன் படைக்கப்பெற்ற யான், அவ்வறிவின் பயனை எனக்கும் பிறருக்கும் பயன்படுத்த வேண்டாவா? நல்ல வீணையைச் செய்தால், அதில் இசையை எழுப்பி மக்களை மகிழ்விக்க வேண்டாவா? அவ்வீணையைப் புழுதியில் எறிவது எவ்வளவு அறியாமை யுடையது! அதைப் புழுதியில் எறிவது எவ்வளவு தவறுடையதோ, அவ்வளவு தவறுடையதன்றோ நல்ல அறிவைப் பயன்படுத்தாமல் வீணாகச் செய்வது?

வெள்ளி வீதியார், 'நல்ல பசும்பால் நிலத்தில் கொட்டப்பட்டதுபோல, என் அழகைப் பசலை நோய் உண்கிறதே!' என்று கூறுவதற்கும் பாரதியார், 'நல்ல வீணை புழுதியில் எறியப்பட்டது போல என் சுடர் மிகும் அறிவு வீணாகப் போகிறதே!' என்று கூறுவதற்கும் வேறுபாடு ஒன்றும் இல்லை. ஆனால், ஆடவராகலின், கவிஞர் அறிவு வீணாகப் போவதற்கு இறைவியை ஓரளவு குற்றவாளியாக்குகிறார். வெள்ளி வீதியார் பெண்ணா கலின், தம் அழகு கெடுவதற்குத் தலைவனைக் காரணமாக் காமல், தம் நிலையை மட்டும் கூறி வருந்துகிறார்.

அழகைப் பசலை நோய் உண்கிறது பற்றித் தோன்றிய வருத்தம், தீரும் வழியாக இல்லை. எப்பொழுது அவ் வருத்தம் தீரும்? எப்பொழுது தலைவன் வருகிறானோ, அப்பொழுதுதான் பசலை நோய் போகும். தலைவன் முகமாகிய கதிரவனைக் கண்ட உடன் பசலையாகிய இருள் தானே நீங்கிவிடும். ஆனால், கதிரவன் உதயம் ஆகும் பொழுதுதான் உண்டாகுமே தவிர, நாம் விரும்பும் பொழுது உண்டாவதல்லவே! எனவே, தலைவனும் வந்த பாடில்லை; தலைவியின் துயரும் தீர்ந்தபாடில்லை.

நாட்கள் ஓடி மறைகின்றன. எத்தனையோ முறை சந்திரன் வளர்ந்து தேய்ந்துவிட்டான். ஒவ்வொரு முறையும் சந்திரனைக் காணும் பொழுதெல்லாம்,

தலைவன் வந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும் என்று தலைவி கருதுவாள்! தலைவனுக்கும் இதே மாதிரி சந்திரன் தோன்றியவுடன் எண்ணத் தோன்றாதா? தோன்றினால் உடனே புறப்பட்டு வருவான். வந்து, தலைவியின் வீட்டின் புறக்கடைப் பக்கம் ஓசைப்படாமல், நிற்பான். பிறர் அறியாமல் தலைவி மட்டும் அறிந்து கொள்ளக்கூடிய வகையில், மென்மையாக ஓசைப்படுத்து வான்.

அயர்ந்து உறங்கிக்கொண்டிருக்கும் தாய் முதலானவர் கட்கு அவ்வோசை கேளாது. ஆனால், விழித்துக்கொண்டு காதைத் தீட்டிக்கொண்டிருக்கும் தலைவிக்கு, அம்மெல்லிய ஒலி கேளாமல் இராது. ஒலியைக் கேட்டவுடன், அவள் வெளியே வருவாள். நிலவின் பால் போன்ற ஒளியிலே அவளும் தலைவனும் இன்பமாகப் பொழுது போக்குவர்.

அதிலும், இன்று ஊரில் திருவிழா நடைபெறுகிறது. விழாக் கொண்டாடுகின்ற கும்மாளத்தில் அனைவரும் ஈடு பட்டுள்ளனர். எப்பொழுது பார்த்தாலும், பிறருடைய விஷயங்களை அறிந்துகொள்வதில் பேரார்வஞ்செலுத்தி, அவர்கள் விஷயங்களில் தலையிடும் சிலர், எல்லா ஊர் களிலும் எல்லாக் காலங்களிலும் இருப்பர். அப்படிப்பட்ட நல்லவர்களும், இப்பொழுது திருவிழா நடைபெறுகின்ற காரணத்தால், பிறருடைய விஷயங்களில் தலையிடுவதை மறந்து, திருவிழா எக்களிப்பில் ஈடுபட்டுள்ளார்கள்.

இவ்வாறு கருதி, அன்று எவ்வாறேனும் தலைவன் வருவான் என்று எதிர்பார்த்துக்கொண்டு, தலைவி படுத்து உறங்குவது போலப் பாசாங்கு செய்துகொண் டிருந்தாள். நேரம் ஓடிக்கொண்டே இருந்தது. கிழக்குத் திசையில் புறப்பட்ட பூரண சந்திரனும், யாருக்கும் பயன் படாமல் இதோ மெல்ல மறையப் போகிறான். ஊர் முழு வதும் விழாக் கொண்டாடுகிற சாக்கில், ஊரின் வெளியே சென்று களியாட்டமாடுகின்றனர். தலைவி மட்டும்

'கொட்டு கொட்'டென்று விழித்துக் காத்துக்கொண் டிருக்கிறாள், வாராத தலைவனது வாராத வரவை எதிர் பார்த்து.

'ஒருவாறு இரவு கழிந்து விடியற்காலமும் ஆகி விட்டது. வண்டுகள் தங்கள் துணையுடன் கூடிக் கொண்டு, விடியற்கால நேரமாதலின், மலர்களில் உள்ள தேனை உண்ணப் புறப்பட்டுவிட்டன. ஆனால், யான் மட்டும், அணிகள் எல்லாம் கழலக்கூடிய தனிமை நோயொடு, விடியுமட்டும் இமையொடு இமை பொருந் தாமல் இருக்கிறேன். எனவே, என்னோடு இவ்வுலகம் போராடுகின்றது. உலகுடன் என் தனிமைப்பட்ட நெஞ்சும் போராடுகிறது' என்னும் இவ்வழகிய பொருளில் வெள்ளி வீதியார் கவிதை புனைகிறார் :

**'நிலவே, நீல்நிற விசும்பில் பல்கதிர் பரப்பிப்**
**பால்மலி கடலில் பரந்துபட் டன்றே ;**
**ஊரே, ஒலிவரும் சும்மையொடு மலிதொகு பீண்டிக்**
**கலிகெழு மறுகின் விழவய ரும்மே ;**
**கானே, பூமலர் கஞலிய பொழிலகந் தோறும்**
**தாமமர் துணையொடு வண்டுஇமி ரும்மே ;**
**யானே, புனைஇழை ஞெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு**
**கனைஇருட் கங்குலும் கண்படை இலனே ;**
**அதனால், என்னொடு பொருங்கொல்இவ் வுலகம் !**
**உலகமொடு பொருங்கொல்என் அவலமுறு நெஞ்சே !'**

(நற். 348)

நிலவு, கடல், ஊர், மக்கள், காடு, துணையுடன் கூடிய வண்டு என்ற இவற்றைப்பற்றி அழகொழுகப் பேசிவிட்டு, அடுத்தபடியாகத் தன்னுடைய பரிதாபமான நிலையைத் தலைவி பேசும்பொழுது நம்மையும் அறியாமல் நம் மனம் தலைவியின் துயரில் பங்கு கொள்கிறது.

# 12. அஞ்சாத அறிவுரை

சங்கப் பாடல்களாகிய எட்டுத் தொகையுள் **பதிற்றுப் பத்து** என்பது ஒரு தொகுப்பு நூல்; சேர மன்னர் களைப்பற்றியே முழுவதும் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு மன்னனுக்கும் பத்துப் பாடல்கள் வீதம் பத்து மன்னர்களைப்பற்றிய பாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

இதில் சிறப்பு யாதெனில், கிடைக்காமற் போன இரு பத்துக்கள் போக எஞ்சிய எட்டுப் பத்துக் களுள் ஒரு பத்தை ஒரு பெண் புலவர் பாடியுள்ளார். பாடியவர், நாம் முன்னரே அறிந்துள்ள **காக்கை பாடினியார் நச்செள்ளையார்.** அவரால் பாடப் பெற்ற பெருமை வாய்ந்த மன்னன் **ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்** என்பவன். இப்பெண்ணரசியார் பாடிய பத்துப் பாடல் களும், பதிற்றுப் பத்தில் ஆறாவது பத்தாக வைக்கப் பட்டுள்ளன.

காக்கை பாடினியார் பாடிய பத்துப் பாடல்களும் சேர்ந்து இருநூறு அடிகளே உள்ளன. மிகப் பெரிய பாடலில் முப்பத்தேழு அடிகளும், மிகச் சிறிய பாடலில் எட்டு அடிகளும் உள்ளன.

'பதிற்றுப்பத்து' என்ற தொகுப்பு நூலில் உள்ள பத்துப் பத்துக்களையும் பாடியவர்கள் ஆண் மக்களே என்று கூற இடம் தாராதபடி, ஒரு காக்கைப் பாடினியார் அதனிடைப் புகுந்தார். பத்துப் பேருக்குள் ஒருவராக நடு நாயகமாக விளங்குகிறார் இப்பெண் புலவர்.

இப்பெருமாட்டியார் பாடியுள்ள பாடல்களில், பற்பல சிறந்த பொருள்களைப் பாடியுள்ளார். மிகப்

பழைய காலத்தில் இருந்த சேர நாட்டையும், சேரன் தலைநகரையும், அந்நாட்டின் சிறந்த உறுப்புக்களையும் பாடியுள்ளார். அம்மட்டோ? சேர மக்களின் உணவு, கல்வி, வாழ்வு முறை, படை முதலியவற்றையும், சேரனு டைய போர்த்திறம், புகழ் முதலியன பற்றியும் சுவைபடக் கூறியுள்ளார். சுருங்கக் கூறுமிடத்து, இவருடைய பாடல்களைக் கொண்டு அற்றை நாள் சேர நாட்டின் வரலாற்றைக் கூடப் பத்து ஆண்டுகள் அளவுக்குக் கூறி விடலாம்.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த முறையில், சரித்திரம் என்று கூறத்தக்க முறையில், இவர் பாடிய பாடலின் சில பகுதிகளை விரிவாகக் காண்போம்.

சேர நாட்டின் மேற்கரைப் பகுதியை ஆட்சி செய் தான் சேரலாதன். அவன் ஆண்ட நாட்டின் பெரும்பகுதி கடல் மோதும் கரையை யுடையது. எனவே, அவனுடைய நாட்டின் பெருமையைக் கூறப் பாடலைத் தொடங்கும் ஆசிரியர்க்குக் கடற்கரை நினைவுக்கு வருகிறது. கடற் கரையில் ஓயாது காற்று வீசுதலின், அலைகள் மலைபோல எழுந்து கரையில் மோதுகின்றன. தூரத்தே இருந்து இக்காட்சியைப் பார்ப்பதோடு புலவர் நின்றுவிடவில்லை. கவிஞராதலின், கடல் இடும் பேரிரைச்சலுக்குக் காது கொடுத்துக் கேட்கிறார். கவிதை பிறக்கிறது. பாடல் மிக நீண்டதாகலின், சிற்சில பகுதிகளை மட்டும் காண்போம்.

'துளங்குநீர் வியலகங் கலங்கக் கால்பொர
விளங்கிரும் புணரி உருமென முழங்கும்
கடல்சேர் கானல் குடபுலம் ........'

[அசைகின்ற நீர் நிரம்பிய அகன்ற கடற்பரப்பானது கலங்கும்படி காற்று மோதுதலால், விளங்க எழுகின்ற பெரிய அலைகள் இடி போல முழங்கும் கடல்]

பாடலை வாய் விட்டுப் படித்துப் பார்த்தால் மேலே கூறிய அனைத்தியல்புகளையும் அதிற் காணலாம்.

'துளங்குநீர் வியலகங் கலங்கக் கால்பொர'

என்ற முறையில் தடித்த எழுத்துக்களை அழுத்தம் கொடுத்துப் படித்தால், அலைகள் தெருட்டுவதை ஆசிரியர் ஒலிக் குறிப்பின் மூலம் அறிவிக்கிறார் என்பதை எளிதில் அறியலாம்.

படமெடுத்து ஆடும் பாம்புகள் நிறைந்த மலையை இதோ வருணிக்கிறார் அம்மையார். படுத்த நிலையிலிருந்து தலையைத் தூக்கிப் படம் எடுத்து ஆடித் தாழ்ந்தும் உயர்ந்தும் ஆடும் பாம்பு, அரங்கத்தில் நாட்டியம் ஆடும் பெண்ணுடன் உவமிக்கப்படுகிறது :

**'இயலினள் ஒல்கினள் ஆடும் மடமகள்**
**வெறியுறு நுடக்கம் போலத் தோன்றிப்**
**பெருமலை வயின்வயின் விலங்கும் அருமணி**
**அரவு வழங்கும்...........**

[நடந்தும் அசைந்தும் ஆடும் நாட்டியக்காரி ஆடுங் களத்தே தோன்றி மருளூற்று அசைந்தாடுவது போல, பெரிய மலையின்கண் இடங்கள் தோறும் குறுக்கே ஊர்ந்து சென்று படமெடுத்து ஆடும் பெரிய ரத்தினத்தையுடைய பாம்பு]

நாடு மலை நாடாய் இருப்பினும், மலைபடு திரவியங்களே சாலும் என்றிருந்து விடாமல், அந்நாட்டு மக்கள் தங்கள் உழைப்பால் நல்ல பயிர் விளைவிக்கிறார்களாம். நன்செய் நிலங்களைப் பயிர் செய்வதற்கு அதிக முயற்சி தேவை இல்லை.

சேரநாட்டில் புன்செய்ப் பயிர் விளைவிப்பவர்கள் பெருமுயற்சி செய்கிறார்களாம். அதனைக் கூற வந்த அம்மையார் **'வன்கை வினைஞர்'** என்று குறிப்பிடுகிறார். வன்கை என்பதற்கு வலிமை பொருந்தின கைகள் என்பது பொருள். அதிக உடலுழைப்பு இருந்தால்தானே கை வன்மையுடையதாகும் ?

**'சிறியிலை வேலம் பெரிய தோன்றும்**
**புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்**
**சீருடைப் பல்பகடு ஒலிப்பப் பூட்டி**
**நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கின்**
**அலங்குகதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன்கண் வைப்பின் நாடு.........'**

*[சிறிய இலைகளையுடைய வேலமரம் நெருக்கமாய் உள்ள புன்செய் நிலத்தில் விதை விதைக்கும் வலிய கையினையுடைய உழவர், சிறப்புடைய பல எருதுகளை (அவற்றின் கழுத்தில் கட்டிய மணி) ஒலிக்கும்படி பூட்டிய ஏர் உழுது, சென்ற வழியில் விளங்கும் கதிர்கள் முற்றிய தால் அழகிய ஒளி பொருந்திய கதிர்களைப் பெறும் இடம் அகன்ற நாடு.]*

*சேரமன்னன் யானைப் படைகளை மிகுதியாகப் பெற்றுள்ளான். சேரனுடைய யானைகள் எத்தகையவை தெரியுமா? பகையரசர்களுடைய கோட்டை அல்லது அரண்மனைகளில் கதவுகளைக் கண்டால் தம் பொறு மையை இழந்துவிடும். காலம் பார்த்துத் தாக்க வேண்டும் என்பதற்காகப் பாகர்கள் குத்துக் கோலால் குத்தி, அவற்றை அடக்கி நிறுத்த முயல்கிறார்கள். ஆனால், அவை நின்றால் தானே! வேகமாக முன்னேறித் தம் கொம்புகளால் அக்கதவை முட்டி உடைக்கவே முற்படு கின்றனவாம். இதோ புலவர் அந்த யானைப் படை பற்றிப் பாடுகிறார் :*

'குழூஉநிலைப் புதவில் கதவுமெய் காணின்
தேம்பாய் கடாத்தொடு காழ்கை நீவி
வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுதல்
ஏந்துகை சுருட்டித் தோட்டி நீவி
மேம்படு வெல்கொடி நுடங்கத்
தாங்க லாகா ஆங்குநின் களிறே !'

*[பல நிலைப்படிகளையும் உடைய கோட்டை வாயிலில் கதவுகளை உண்மையில் கண்டால், வண்டுகள் பாய்ந்து*

உண்ணும் மதநீர் பொழிகின்ற அவை, குத்துக்கோலை மதியாமல் வேங்கைப் புலியுடன் போர் செய்ததாலுண்டாகிய தழும்புகளுடன் கூடிய புள்ளிகளுடைய நெற்றியை உடைய யானைகள் நிமிர்ந்த கையைச் சுருட்டி, யானை மேல் உள்ள வீரர்கள் ஏந்திய அங்குசத்தைக் கடந்து போரில் மேம்பட எடுத்த கொடி அசையுமாறு சென்று அம்மதிற் கதவுகளைப் பிளக்கும்.]

இத்தகைய யானைப்படையை உடைய சேரனது காலாட் படை பற்றியும் புலவர் கூறுகிறார். "இன்று நன்கு உண்டுவிட்டோம்! ஆனால், நாளை அக்கோட்டையைப் பிடித்தால் ஒழிய உண்ணமாட்டோம்!" என்ற பொருளில்.

> **"இன்றுஇனிது நுகர்ந்தனம் ; ஆயின் நாளை**
> **மண்புனை இஞ்சி மதில்கடந்து அல்லது**
> **உண்குவம் அல்லேம்...!'**

என்று கூறுகிறார்கள்.

இத்தகைய படைகளையுடைய சேர மன்னன் எத்தகையவன்? அவனுடைய வீரத்தையும், கொடைச் சிறப்பையும் பலபடியாகப் பாராட்டுகிறார் ஆசிரியர். வீரம் என்பது போர்க்களத்தில் பகைவர்க்கு அஞ்சாது எதிர் நின்று போரிடுதலாம். ஆனால், அதனினுஞ் சிறந்த வீரம் ஒன்றுண்டு. அதுவே பகைவனுக்கு ஓர் இடுக்கண் நேர்ந்த பொழுது, அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு வெற்றி பெறாமல், விட்டுக் கொடுத்தலாகும். சேரலாதனிடம் இக்குணம் நிறைந்திருந்ததென்பதைக் காக்கை பாடினியார், "**குரல் புணர் இன்னிசைத் தழிஞ்சி பாடி...புரவு எதிர் கொள்வனைக் கண்டனம்**" (பதிற். 57) என்ற அடியால் விளக்குகிறார்.

இனி, அவன் கொடைத்திறத்தைக் கூறுகிறார் புலவர். சாதாரணமாக ஓர் ஆண் மகன் பொறுக்க முடியாத

ஒன்று, பெண்களின் கண்ணீர். இந்த அம்பின் எதிரே எந்த ஆடவனும் தாழ்ந்து விடுவான். ஆனால், சேரலாதன், 'பெண்கள் கண்ணீரைக் கண்டு அஞ்சுவதைக் காட்டிலும், ஏழைகளின் துயரைக் கண்டு அஞ்சி, அவர்கள் வறுமையைப் போக்கினான்,' என்ற கருத்தில், '**ஒண்ணுதல் மகளிர் துளித்த கண்ணினும்**, இரவலர் புன்கண் அஞ்சும், **புரவு எதிர் கொள்வோன்**" என்று கூறுகிறார். மேலும், அவன் கை, கொடுக்கக் குவிதல் அல்லது, பிறரிடம் ஒன்றைப் பெற விரிதல் இல்லை என்ற பொருளில், "**இரப்போர்க்குக் கவிதல் அல்லது இரை இய மலர்பு அறியா**" என்றும் கூறுகிறார்.

இத்துணைச் சிறந்த மன்னனுக்கும் அப்பெண் புலவர் அறிவுரை கூறுகிறார். மனிதன் எத்துணைச் சிறந்தவனாயினும், சில நேரங்களில் எல்லை மீறிச் சென்று விடுவது உண்டு. அந்த நேரங்களில் அறிவுடைப் பெருமக்கள் அவனுக்கு அறிவு வருமாறு இடித்துக் கூறுவர். நிறைந்த வெற்றிகளைப் பெற்றமையால் போலும், சேரலாதனும் ஒரு தவற்றைச் செய்தான்! அதாவது பகைவருடைய நாட்டின்மேல் படை கொண்டு சென்று வென்ற பின்னரும் சினம் தணியாமல் பழிவாங்கும் நோக்குடன் அவர்கட்குத் துன்பம் விளைத்தான்; அவர்கள் நாடு தன்னால் வெல்லப் பட்டமையின் இனித் தன்னுடையதே என்று நினைத்து, அதனைக் காப்பாற்றாமல் விட்டுவிட்டான். இவ்விரண்டு இயல்பையும் புலவர் கண்டிருக்கிறார்: "அரசே, உன் வலிமையை அறியாமல் போரிட்ட மன்னர் தோற்றுக் கப்பம் செலுத்துவராயின். அவர்களிடம் மேலும் சினங் கொள்ளாதே" என்ற கருத்தில்,

**'அறியாது எதிர்ந்து துப்பில் குறையுற்றுப்**
**பணிந்துதிறை தரும்நின் பகைவ ராயின்**
**சினம்செலத் தணிமோ!'**

என்று பாடுகிறார்.

வெற்றிச் சிறப்புகளுடன், மிக்க சினமும் உடைய ஒரு மன்னனைப் பாடிப் பரிசில் பெறச் சென்ற இப்பெண் புலவர் எவ்வாறாயினும் அவனைப் புகழ்ந்து பரிசில் பெற்று வந்துவிடவேண்டும் என்று கருதாமல், அவனுக்குப் பிடிக்காவிடினும் தம் கடமை அவனுக்கு அறிவூட்டுவதே என்று கருதினார். தம் கருத்தை அஞ்சாமல் பாடலிலும் அமைத்துப் பாடினார் என்றால், என்னே இவருடைய அஞ்சா நெஞ்சம்! இத்தகைய அஞ்சா வீர மகளிர் பலரையும் பெற்றதால்தான், தமிழ் நாகரிகம் இன்னும் நின்று நிலவுகிறது போலும்!

## 13. மான வாழ்க்கை

தெருவில் இரண்டு பேர் மிகவும் கோபத்துடன் பேசிக் கொள்ளுகின்றனர்: வாய்க்கு வந்த சொற்களையெல்லாம் பயன்படுத்துகின்றனர். வாய்ச் சண்டை கைச்சண்டையாகும் நிலை ஏற்படுகிறது. அந்த நேரத்தில் ஒருவர், இருவரையும் சமாதானம் செய்து வைக்க முயல்கிறார். "நேற்றையப் பயல் இவன் என்னை மானங்கெடப் பேசிவிட்டானே!" என்கிறார் அவர். இது சாதாரண நிகழ்ச்சி. மானம் என்பது உண்மையில் யாது?

மனிதன் தன்னுடைய நிலையிலிருந்து தாழ்வது யாது? 'இவனா இந்தச் செயலைச் செய்தான்!' என்று பெரியோர்கள் சொல்லக் கூடியவற்றைச் செய்தலே தாழ்வதாகும். ஏன் அவ்வாறு செய்ய நேரிடுகிறது? வேண்டிய பொருளைப் பெற மேற்கொள்ளும் வழி தன் மதிப்புக்கு ஏற்றதா என்பதைக்கூட அவன் ஆராய்வதில்லை. அதன் மறுதலையாகப் பொருளின் மேற்கொண்ட பற்றுக் காரணமாக, எவ்வழியை மேற்கொண்டேனும் பொருளைப் பெற்றுவிட வேண்டும் எனக் கருதுகிறான். தவறான வழியை மேற்கொள்ளும் பொழுது, பெரியோர், 'இவனா

இவ்வாறு செய்தான்!' என்று பேசுகின்றனர். சுருங்கக் கூறினால், பிறர் அறிந்தாலும் அறியாவிட்டாலும், தவறான செயலைச் செய்யும்போது மனிதன் மானத்தை இழக்கிறான். பிறர் அதனை அறிந்து கூறாவிட்டாலும், அவன் மனச்சான்று நன்கு இடித்துக் கூறும் என்னலாம்.

மிகவும் தேவையான பொருள்களைப் பெற வேண்டு மானாற்கூட இதே சட்டம்தான் பேசப்படும். இதோ வள்ளுவர் பேசுகிறார்: **''ஈன்றாள் பசி காண்பான் ஆயினும் செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை."** (656) 'பெற்றெடுத்த தாயும், குழவியும், கற்புடைய மனைவியும் பசியால் வாடி உயிர் விட நேரிட்டாலுங்கூடச் சான்றோர் பழிக்கும் வினையைச் செய்யலாகாது,' என்று ஆசிரியர் கூறுவதால் இவ்வுண்மை விளங்கும்.

இன்றைய உலகில் பசி போன்ற பொறுத்தற்கு இயலாத துன்பங்கள் ஒருபுறம் இருக்க, சாதாரண காரியங்கட்குக்கூட மனிதன் தன் நிலைக்கு ஒவ்வாத வற்றைச் செய்கிறான். ஆனால், பழந்தமிழர் இவற்றைச் செய்ய மிகவும் அஞ்சினர்.

ஔவையாருக்கும் அதியமானுக்கும் இடையே இருந்த நட்பு ஒப்பற்றது. நட்பின் சிகரம் என்று கூறக்கூடிய அளவில் அவர்கள் நட்பு நன்கு வளர்ந்து உரம் பெற்றிருந் தது. அதியமான் பரிசில் கொடுப்பவனாகவும், பாட்டி யார் அதனை ஏற்றுக் கொள்பவராகவும் என்றுமே தம்மைக் கருதியதில்லை 'யானை கோட்டிடை (கொம்பு களிடையே) வைத்த கவளம் போல' அவன் பரிசில் தப்பாது என்று அவரே ஒரு முறை பாடியுள்ளார்.

சுருங்கக் கூறினால், அவர் வேண்டியவற்றை அவனிட மிருந்து எடுத்துக்கொள்ளலாம் என்ற நிலையில் பழகினர் இருவரும் எனலாம். ஆனால், மனிதன் முக்குண வயப் பட்டவன். பல எதிர்பாராத நேரங்களில் தவறான குணங்கள் அவனை ஆட்கொள்வதால், அவன் சிறிய

தவறுகள் செய்யவும் நேரிடுகின்றது. அதியமான் சிறந்த வள்ளல்களுள் ஒருவன்தான் எனினும், அவனும் மனிதன் தானே? இதனால் ஒரு முறை பெரிய தவறு ஒன்றைச் செய்து விட்டான். ஏனையோர் தவறு செய்தால் தீய பயன் விளையும். ஆனால், அதியமான் செய்த தவற்றால், சிறந்த கவிதை ஒன்று பிறந்தது!

ஒரு முறை ஔவையார் அதியமானைப் பார்க்கப் புறப்பட்டுச் சென்றார். ஓர் அரசனைப் பார்க்கப் போவதென்றால், அவனுடைய சமயம் அறிந்து செல்ல வேண்டாவா? வாயிற்காவலன் வரை பாட்டியார் சென்று விட்டார். ஆனால், அவன் தடுத்து நிறுத்தி விட்டான். பாட்டியாரை இதுவரை எந்த அரசனுடைய அவைக் களத்திலும் தடுத்து நிறுத்தியவர் இல்லை. ஆனால், அவர் மிகுதியும் பழகுகின்ற அதியமானுடைய வீட்டில் அவன் இருக்கும் காலத்திலேயே அவர் தடுத்து நிறுத்தப்பட்டால், இது பெரிய வியப்பன்றோ! ஒரு வேளை வாயிற்காவலன் புதியவனாக இருக்கலாம்; தம்மை அறியாமல் தடுத்து நிறுத்திவிட்டான் என்று கருதினார் பாட்டியார். அரசனிடம் தம் வருகையை அறிவிக்குமாறு கூறினார். வாயிற்காவலன் உள்ளே சென்று அறிவித்துங்கூட, அதியன் அவரை அழைக்கவில்லை. அன்றெல்லாம் பாட்டியார் அதியனைக் காணாமலே இருந்து விட்டார். அரசியல் அலுவல்களில் அவன் ஈடுபட்டிருக்கலாம்; அதனாலேயே தடை ஏற்பட்டது என்று கருதி இருந்து விட்டார்.

ஆனால், நாட்கள் ஒன்று, இரண்டு என உருண்டோடி விட்டன. இன்னமும் அதியன் அவரை அழைக்கவில்லை. ஆனால், அரசியல் காரியங்கள் அனைத்தும் நடைபெறத் தான் செய்தன. பாட்டியார் பொறுமையை இழந்து விட்டார். என்ன நினைத்து விட்டான் அதியன் தம்மைப் பற்றி? பரிசில் வாங்க வருதலினால் தம் மதிப்பைக் குறைத்துக் கருதி விட்டானா? பரிசில் வாங்கவா அவர்

வருகிறார்? நண்பனைக் காணச் சென்ற இடத்தில் பரிசில் பெறுதல் இரண்டாவதாக நடைபெறுவதே தவிர, பரிசிலைக் கருதியே அவர் செல்வதில்லையே!

பாட்டியாருக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அது தான் போகட்டும்; பரிசில் வாங்குவதற்காகவே ஒருவர் வருவதாக வைத்துக்கொள்வோம். அதற்காக அவரைக் காணாமல் வெளியில் நிறுத்தி வைப்பதா? எத்துணைத் தூரம் கடந்து, எத்துணை இடர்களைப் பொறுத்துக் கொண்டு வரவேண்டியுளது ஒரு வள்ளலைக் காண்பதற்கு? முன்னர் ஒரு புலவன் பரிசிலன் துயரங்களையெல்லாம் சேர்த்துப் பாடிய பாடல் பாட்டியார் நினைவிற்கு வந்தது:

**'ஆனினம் கலித்த அதர்பல கடந்து**
**மானினம் கலித்த மலைபின் ஒழிய**
**மீன்இனம் கலித்த துறைபல நீந்தி**
**உள்ளி** வந்தானாம் அப்புலவன்... (புறம்-138)

[மாடுகள் நிறைந்த காட்டையும், மான்கள் நிறைந்த மலைகளையும், மீன்கள் நிறைந்த ஆறுகளையும் கடந்து உன்னை நினைத்து.......]

இத்தனைத் துயரங்களையும் பொறுத்துக் கொண்டு வரும் பரிசிலர்களைக் காணாமல் காக்க வைப்பது என்ன பெருந்தன்மை? அற்பர்கள் தாம் வந்தவருடைய வருத்தத்தை அறியாமல், தம்முடைய பெருமையைக் காட்டக் காக்க வைப்பார்கள்.

தமிழ் நாட்டில் இக்காலத்தில் மட்டும் காணப் பெற்றுப் பிற நாடுகளிலும் பிற காலத்திலும் காணப் படாத இந்த இனத்தைச் சேர்ந்தவனா அதியமான்? பின்னர் ஏன் பாட்டியாரை நாட்கணக்கில் காக்க வைத்து விட்டான்? நண்பர் என்ற முறையில் உடனே கண்டிருக்க வேண்டும். பரிசிலர் என்று கருதினாற்கூட இத்தனை

நாள் காக்க வைப்பது மனிதரை மனிதன் இழிவுபடுத்துவ தாகும். எனவே, பாட்டியார் தம் மானம் போய்விட்ட தாகக் கருதி விட்டார். காக்க வைத்த தவறான செயலைச் செய்தமையின் அவனும், பரிசிலைக் கருதிக் காத்திருந்தமை யின் தாமும் மானம் இழந்ததாகக் கருதினார் பாட்டியார். உடனே வாயிற்காவலனிடம் கூறுவதுபோல ஒரு கவிதை கூறினார்.

'வாயிற்காவலனே, வள்ளல்கள் செவியிடத்து விளங்கிய சொற்களை விதைத்து, அதனால் தாம் விரும்பிய பரிசிலை விளையுமாறு செய்கின்ற உரமுடைய நெஞ்சுடன் கூடிய மேம்பாட்டை அடைய விரும்பும் பரிசிலால் வாழும் இல்வாழ்வுடையார்க்கு; அடையாத வாயிலின் காவலனே! விரைந்த குதிரையை உடைய அதியமான் தன் தரத்தை அறியவில்லையா? அது கிடக்க. என் தரம் அறிய வில்லையா? அறிவும் புகழும் உடையோர் அனைவரும் இறந்துவிட்டார்களா? உலகம் வெறிச்சிட்டுப் போய் விட்டதா? ஆதலால் எம் இசைக் கருவிகளையும், பிற வற்றையும் மூட்டைக் கட்டிவிட்டோம். மரத்தை வெட்டும் தச்சனுடைய பிள்ளைகள் கோடரியுடன் காட்டில் புகுந்தால் காடு எவ்வாறெல்லாம் பயன்படும்? யாமும் எத்திசையில் சென்றாலும், அத்திசையெல்லாம் சோறு உண்டு,' என்ற கருத்துப்படப் பாடினார் :

**'வாயி லோயே! வாயி லோயே!**
**வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்**
**உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து**
**வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கைப்**
**பரிசிலர்க்கு அடையா வாயி லோயே!**
**கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி**
**தன்அறி யலன்கொல்? என்அறி யலன்கொல்?**
**அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென**
**வறுந்தலை உலகமும் அன்றே! அதனால்**

**காவினெங் கலனே ! சுருக்கினெம் கலப்பை !**
**மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்**
**மழுவுடைக் காட்டகத்து அற்றே**
**எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே !'**

(புறம். 206)

பிறரிடம் சென்று பரிசில் வாங்குபவர் என்று கூறப் படுபவரைப் பற்றி, அவர் யாது கூறுகிறார் ? 'உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்துப் பரிசிலர்' என்பதால், நெஞ்சு உரம் கொண்டவர்கள் ; நினைத்ததைச் செய்து முடிப்பவர்கள் என்றுங் கூறுகிறார். 'வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கை' என்றதனால் எப்படிக் கொடுத்தாலும் சரியென்று நினையாமல் (பிச்சைக்காரர் அல்லர் பரிசிலர்) கௌரவமான முறையில் உபசரிக்கப்படுவதையே விரும்புவர் என்றும் கூறுகிறார். 'பரிசிலர்க்கு அடையா வாயிலோயே !' என்று கூறும்பொழுது எவ்வளவு 'எள்ளல் சுவை' (Irony) வைத்துப் பாடுகிறார் ! கதவை மூடிக் கொண்டு இவரைப் பார்க்க அனுமதியாதவனைப் பார்த்து அடையாத கதவினையுடையவனே என்பது நகைப்பை உண்டாக்குகிறதன்றோ ? அதியமான் கொடுக்காவிடில் உலகத்தில் வள்ளல்களே 'இல்லையென்றா நினைத்துக் கொண்டாய் ? உலகம் வள்ளல்கட்கு, அவ்வளவு தரித்திரப்பட்டுப் போய்விடவில்லை ! பரிசிலர்கள் எத்திசையில் சென்றாலும் அத்திசையில் எல்லாம் சோறு கிடைக்கும் என்ற பொருளே கடைசி ஆறு அடிகளில் பேசப்படுகிறது.

என்ன காரணத்தால், பாட்டியாரைப் பாராமல் அதியமான் இருந்துவிட்டான் என்பதை நாம் இன்றும் அறிய முடியவில்லை. ஆனால் அச்செயலால் தம்முடைய மானமே போய்விட்டதாகப் பாடும் பாட்டியாரது பாடல் உலக இலக்கியத்தில் வைத்து மதிக்கத் தக்கதாய்த் தோன்றிவிட்டது !

# 14. மகளிர் உவமைகள்

இலக்கியத்தில் உவமை என்ற ஒன்று காணப்படும். கண்டதோர் பொருளைக் கொண்டு, காணாத பொருளை அறிவிப்பதற்காகவே உவமை ஆதியில் உண்டாகியிருத்தல் வேண்டும். காட்டுப் பசுவைக் காணாத ஒருவனுக்கு வீட்டுப் பசுவைக் காட்டி, 'இது போலத்தான் காட்டுப் பசுவும் இருக்கும்,' என்று கூறவேண்டிய நிலையில், 'ஆ போலும் ஆமா' என்று கூறியிருப்பர். 'ஆ' என்பது வீட்டுப் பசுவையும், 'ஆமா' என்பது காட்டுப் பசுவையும் குறிக்கும். விளக்கம் ஒன்றையே கருதி, ஆதியில் பயிலப் பட்ட இவ்வுவமை நாளாவட்டத்தில் இலக்கியத்தில் ஒப்பற்ற ஓர் உறுப்பாய் அமைந்துவிட்டது.

தமிழ்க் கவிதை உவமைக் கருவூலம். சங்கப் பாடல்கள் தொட்டு, இன்றைய பாடல்கள் வரை உவமை இல்லாத கவிதைகளே இல்லையென்று கூறிவிடலாம்.

உவமை கூறுவது என்பது மிகவும் பழைமை வாய்ந்த தாயிருப்பினும், ஏறத்தாழ அனைவராலும் பயன்படுத்தப் படினும், அனைவர் உவமையும் சிறந்துவிடுவதில்லை. சிறந்த உவமை கூறும் இயல்புடைய புலவர் ஒரு சிலரே ! ஏனையோர் உவமைகள் அறியப் பயன்படுமே தவிர, அனுபவிக்கப் பயன்படுவதில்லை. இன்னும் கூறப் போனால், ஒரு கவிஞன் பயன்படுத்தும் உவமையிலிருந்தே அவனுடைய அறிவுச் சிறப்பை நன்கு அறியலாம்.

பெண்பாற் புலவர்கள் உவமை கூறுவதில் மிகவும் சமர்த்தர்கள். வீட்டினுள்ளும் ஊரினுள்ளும் காணப்பெறும்

பொருள்களைக் கொண்டே இவர்கள் உவமை கூறிவிடுவார்கள். ஆனாலும், என்ன அழகு அதில்! இதோ சிலவற்றைக் காணலாம்:

அதியமான் நெடுமான் அஞ்சி மிகப் பெரிய வீரன். வீரர்கள் நிறைந்துள்ள தமிழ் நாட்டில் அவன் ஒரு தனி வீரனாய் உள்ளான். அவனைப்பற்றி நாம் கூறுவதாயிருப்பின், சிறந்த வீரன்' என்று கூறுவோம். இன்னும் அதிகமாகக் கூறினால், 'வீரர்க்குள் ஒரு வீரன்' என்னலாம். அதற்கு மேல் யாது கூறமுடியும்? இதோ, பாட்டியார் (ஔவையார்) கூறுகிறார்.

பாட்டியார் பல ஊர்கள் சுற்றித் திரிபவர். எல்லா ஊர்களிலும், எல்லா வகையான மக்களிடத்தும் அவருக்குப் பழக்கம் உண்டு. தொழில் செய்து வாழ்பவர்களிடம் பாட்டிக்குத் தனி மதிப்பு உண்டு. தொலாளர்களைக் கண்டு பழகிய பாட்டியார், ஒரு தச்சன் மேல் அளவற்ற மதிப்புக் கொண்டிருந்தார். அவன் தொழில் நுணுக்கத்தையும், கை வேகத்தையும், அறிவின் திறத்தையும் பாட்டியார் கண்டு வியந்து நின்றுள்ளார், பல சந்தர்ப்பங்களில். நாள் ஒன்றுக்கு எட்டு முழுத் தேர்களைச் செய்யும் பழக்கமுடையவன் அவன். தினந்தோறும் எட்டுத் தேர்கள் செய்யும் தன் வன்மை, அறிவு, செயல், திறம் எல்லாவற்றையும் காட்டி, நாள் கணக்குப் பாராமல் கலை என்ற முறையில் ஒரு தேரைச் செய்ய முடிவு செய்தான் அவன். ஒரு மாத காலம் சென்று விட்டது.

ஆனால், தச்சன் நாள்தோறும், இரவும் பகலும் அதே வேலையாய்த்தான் இருந்தான். தேர் முடிவு பெறவில்லை. ஏன்? தேரின் சக்கரம் ஒன்றுதான் உருவாகியிருந்தது. எட்டுத் தேரை ஒரு நாளில் செய்யும் தச்சன் தன் முழுத் திறனையும் ஒரு மாத காலம் காட்டிச் செய்த பொருள், தேர்ச் சக்கரம் ஒன்றுதான்! அவ்வாறாயின், அந்தச் சக்கரம் எவ்வாறு இருக்கும்? எத்துணை வலுவும், கலைச் சிறப்பும், தொழில் நுணுக்கமும் அதனிடம் காணப்படும்

அந்தச் சக்கரம் பார்வைக்கு ஏனைய சக்கரங்கள் போலக் காணப்படினும் அலாதியான சிறப்புடையதன்றோ? அத்தகைய சக்கரம் போன்றவனாம் அதியமான். இதோ பாடலைப் பாருங்கள் :

**'களம்புகல் ஓம்புமின் தெவ்விர்! போர்எதிர்ந்து**
**எம்முளும் உளனொரு பொருநன் வைகல்**
**எண்தேர் செய்யும் தச்சன்**
**திங்கள் வலித்த கால்அன் னோனே!'** (புறம். 87)

[களம் புகல் ஓம்புமின்—போர்க் களத்தில் நுழையாதீர் ; தெவ்விர்—பகைவர்களே ; போர் எதிர்ந்து—போர் செய்ய ஏற்றுக்கொண்டு ; எம்முளும் உளன் ஒரு பொருநன் —எங்களிடமும் ஒரு வீரன் இருக்கிறான் ; வைகல்—தினந் தோறும்]

ஒரு மாதம் முயன்று செய்த தேர்க்காலை அதியமானுக்கு உவமையாகக் கூறியமையின், அவன் உடல் வலிமை மட்டும் அல்லாமல், மன வலிமையும் உடையவன் என்பதும், போரை ஒரு கலையாகவே வளர்த்துள்ளான் என்பதும் விளங்க வைத்துவிட்டார் ஔவையார்.

பாட்டியாரது பாடல் எத்தகையதாய் இருப்பினும், அதனை அன்புடன் ஏற்றுக் கொள்ளுகிறானாம் அதியன். ஏன் தெரியுமா? அவரிடத்தில் உள்ள எல்லை மீறிய அன்பினால்! இதை ஓர் உவமையால் கூறுகிறார் பாட்டியார். நேரங் காலம் இல்லாமல் சில குழந்தைகள் 'நொச்சு நொச்சு' என்று பேசிக்கொண்டேயிருக்கும்.

ஐந்தாண்டுகள் நிரம்பிய பின்னருங்கூடச் சில குழந்தைகள் 'மழலைமொழி' பேசும், கேட்பவர் சிரிக்கும் நிலையைத் தாண்டி எரிச்சல் கொள்ளும் நிலையையும் அடைந்து விடுவர். ஆனால், அந்த மழலை மொழியில் பெற்றோர் இன்பங் காண்பர். இம்மனத் தத்துவத்தை நன்கு உணர்ந்து, பெற்றவரே பிள்ளை அருமை

அறிவர் என்பதைக் காட்டவே, இந்த அழகான கருத்தை உவமையாக வைத்துப் பாட்டியார் பாடுகிறார் :

'யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருள்அறி வாரா ஆயினும் தந்தையர்க்கு
அருள்வந் தனவால் புதல்வர்தம் மழலை ;
என்வாய்ச் சொல்லும் அன்ன...
நெடுமான் அஞ்சிநீ அருளன் மாறே.' (புறம். 92)

இசையோடு பொருந்தாமலும், நேரங்காலமில்லாமலும் பேசப்படும் பேச்சு என்பதே முதலடியின் பொருள். ஒப்பற்ற கவிதை பாடும் ஔவையார் தம்முடைய கவிதை எவ்வாறு இருப்பினும், அதியன் அன்பால் அவற்றை ஏற்றுக்கொள்கிறான் என்று உவமை கூறும்போது, அவருடைய அடக்கமும், தற்பெருமையும், இனிமையும் நன்கு விளங்குதல் காணலாம். அவர் பயன்படுத்திய உவமை அவருடைய பண்பாட்டை விளக்குதல் தெளியலாம்.

என்றைக்குச் சென்றாலும், எத்துணை முறைகள் சென்றாலும், அதியமான் பரிசில் தரத் தவறமாட்டானாம் ; வெறுப்பில்லாமல் தருவானாம். எனவே, அவனிடம் பரிசில் பெறுதல் தவறாது என்று கூற வந்த பாட்டியார் பயன்படுத்தும் உவமை மிக்கச் சிறப்பு வாய்ந்தது! கோயில் யானைகளைப் பார்த்தவர்கள் ஒன்று கவனித்திருக்கலாம். அது கட்டியிருக்கும் இடத்திலிருந்து தினந்தோறும் கோயில் வாயிலுக்குச் செல்லும். அப்பொழுது பெரிய நாணல் கட்டு ஒன்றைத் தன் கொம்புகளின் இடையே துதிக்கையால் இடுக்கிக்கொண்டு செல்லும். அந்தப் புல் கட்டை அது வேண்டும்பொழுது தின்னும். ஒருமுறை அதன் கொம்புகளின் இடையே வைத்த உணவு வாயிற் செல்லாமல் தப்புவதில்லை அன்றோ? சிறிது பொறுத்து உண்டாலும், உடனே உண்டாலும் அதன் உணவு அதற்கே பயன்படும்! அதுபோல, அதியன் தரும் பரிசில் தப்பவே தப்பாதாம் :

'யானைதன் கோட்டிடை வைத்த கவளம்போலத்
கையகத் தது அது பொய்யா காதே !' (புறம். 101)

என்று கூறும்பொழுது ஓர் உண்மை புலப்படும் : பரிசில் அவன் விரும்பித் தருவது என்பதை மறுத்து, தன் விருப்பம் போல அவன் தருகிறான் என்ற உண்மையைக் கூறுகிறார் பாட்டி.

மற்றொரு பெண் புலவராகிய மாறோக்கத்து நப்பசலையார் பயன்படுத்தும் சிறந்த உவமையைக் காண்போம் : மலையமான் சோழிய ஏனாதி திருக்கிள்ளி என்பவன் ஒரு சிற்றரசன் தான். சோழ, பாண்டியர் போன்ற பெருவேந்தரும் போர்க் காலத்தில் அவனுடைய துணையைப் பெரிதும் விரும்பி நிற்கும் திறம் பெற்றவன் அவன். அவனுடைய தந்தையும் இவ்வாறே வாழ்ந்தான். ஒரு முறை சோழனுக்கும் மற்றொரு மன்னனுக்கும் (பாண்டியன் ?) போர் நடைபெற்று, அதில் சோழன் தோல்வியுற்று விட்டான். தோற்ற சோழன் மலையமானது முள்ளூர் மலையில் சென்று ஒளிந்து கொண்டான். தம் மன்னனைக் காணாமல் சோணாட்டார் மிகவும் வருந்தினர்.

முன்னொரு காலத்தில் தேவாசுரப் போரில் இத்தகைய நிலை தோன்றியதாம். இரவாகவே இருந்து விடின் தாம் நன்கு போரிடலாம் எனக் கருதிய அசுரர், கதிரவனைக் கடலினுள் ஒளிய வைத்தனராம். இதை அறிந்த கண்ணபிரான் சென்று, ஞாயிற்றைப் பிடித்து வந்து ஆகாயத்தில் வைத்தானாம். அதேபோல, ஒளிந்துள்ள சோழனுக்காக மலையமான் படை கொண்டு சென்று வென்று சோழனை அரியணையில் ஏற்றினானாம். இந்த உவமையை நப்பசலையார் நன்கு பயன்படுத்துகிறார் :

'அணங்குடை அவுணர் கணங்கொண்டு ஒளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது
இருள்கண் கெடுத்த பகுதி ஞாலத்து

**இடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்**
**அஞ்சன உருவன் தந்துநிறுத் தாங்கு**
**.............................................**
**அருவழி இருந்த பெருவிறல் வளவன்**
**புதுமையில் நிறுத்த புகழ்மேம் படுந!'**

(புறம். 174)

சங்க காலம் என்று கூறப்படும் நாளிற்கூட இத்தகைய வரலாறுகள் தமிழ் நாட்டில் வழக்கில் இருந்து வந்தன என்பதற்கும் இவ்வுவமை எடுத்துக் காட்டாகும். உவமையில் மற்றொரு சிறப்பும் உளது: ஞாயிற்றுக்கு உவமையாகச் சோழனும், கண்ணனுக்கு உவமையாகச் சோழிய ஏனாதி திருக்கிள்ளியும் கூறப் பெற்றுள்ளனர்.

கதிரவனைவிடக் கண்ணனும், சோழனைவிடச் சோழிய ஏனாதியும் பெருமையுடையவராய்விட்டமை கண்கூடு. சக்கரவர்த்தியாகிய சோழனைவிட அவன் சிற்றரசனாகிய ஏனாதி உயர்ந்தவன் என்று நேரடியாகக் கூறுதல் தவறாய் முடியும். ஆனால், இந்த அம்மையார் சிறந்த ஓர் உவமையை அறிவுத் திறத்துடன் ஆட்சி செய்வதன் மூலம், தாம் கூற வந்த உண்மையைக் கூறி விட்டார். சோழனைக் கதிரவனுக்கு உவமை கூறி விட்டமையின், யாரும் தவறாக நினைத்தற்கில்லை! ஆழ்ந்து சிந்திக்கும் பொழுது தான் உவமையின் சிறப்பு வெளிப்படுகிறது. இத்தகைய நுணுக்கமான உவமைகள் பாடப் பெண்பாற்புலவர்கள் சிறந்தவர்கள்.

## 15. புலவர் கண்ட போராட்டம்

**சோ**ழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி, சோழப் பேரரசர்களுள் ஒருவன். சிறந்த உடற்கட்டும் போர் வன்மையும் உடையவன்; காமவேள் போன்ற அழகுடைய

வனாயும் இருந்தான் போலும்! அவன் சிறந்த கலைஞ ராகிய ஒரு பெண்பாற் புலவரின் மனத்தைக் கவர்ந்து விட்டான்.

இயற்கையில் சாதாரணமாக நடைபெறும் ஒரு செயல் தான் இது என்றாலும், பெண்டிர் அனைவரும் எல்லா ஆடவாரலும் கவரப்படுவதில்லை. அவரவர்க்கு என்று தனிப்பட்ட சில விருப்பங்கள் இருத்தல் கூடும். அந்த விருப்பத்திற்கு ஏற்ற ஆண்மகன் கிடைக்கும் பொழுது தான், அந்தப் பெண்டிர் தம் மனத்தைப் பறிகொடுப்பர். உதாரணமாக, ஓவியத்தில் வல்ல ஒருத்தி அதே கலையில் வல்ல ஆண் மகனிடத்தில் மனத்தைப் பறிகொடுத்தல் இயல்பு. வேறு எந்தத் துறையில் அவன் வல்லவனாயினும், அதுபற்றிக் கவலையில்லை. ஓவியந் தவிரப் பிற துறை களிலும் அவன் வல்லுநனாய் இருப்பின், அது மேலும் வரவேற்கப்படும் என்றாலும், அவள் மனத்தைக் கவர முதற்காரணமாய் அமைவது ஓவியமேயாகும்.

நக்கண்ணையார் என்பவர் இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன்னர் வாழ்ந்தவர் ஆவர். சிறந்த கல்வி அறிவும், கவிதை இயற்றும் திறனும் இளமையிலேயே வாய்க்கப் பெற்ற பெருங் கவிஞர் அவர். நக்கண்ணையார் இளம்பருவம் உடையவராய் இருந்த காலம் அது. எங்கோ ஒரு மூலையில் அமைந்திருந்த அவருடைய சிறிய ஊரில் அன்று ஒரு பெரிய அமர்க்களம். விடியும் பொழுதிலிருந்தே ஊர் மக்கள் அனைவரும், ஊரின் பொதுவிடமாகிய "மந்தை" என்று தற்காலத்தில் வழங்கப்பெறும் 'மன்று'க்குச் சென்று கூடிக்கொண்டிருந்தனர். ஆண்களும் பெண்களும் நீண்ட தூரத்திலிருந்தும் அண்மையிலிருந்தும் மன்றில் வந்து நிரம்பிவிட்டனர். நக்கண்ணையார் மிகவும் அதிர்ஷ்டமுடையவர் என்றே கூற வேண்டும். இன்றேல், அவருடைய வீடு மன்றை அடுத்து இவ்வளவு மேடான நிலத்தில் அமைந்திருக்குமா? ஏனையோர் அனைவரும் மன்றில் சென்று இடித்துப் புடைத்துக்கொண்டு வேடிக்கை

பார்க்கவேண்டிய நிலையில், இவர் மட்டும் வீட்டுப் புறக்கடையில் வளர்ந்திருக்கும் பனை மரத்தில் சாய்ந்து கொண்டே நடைபெறும் வேடிக்கையை முற்றிலும் காணக்கூடிய பேற்றைப் பெறுவாரோ ?

இத்துணைப் பேர்களும் விழுந்தடித்துக்கொண்டு சென்று காணக்கூடிய வேடிக்கை என்னவாக இருக்கும் என்று நினைக்கிறீர்கள் ? நக்கண்ணையார் ஊரின் மன்றில் ஒரு மற்போர் (குஸ்திச் சண்டை) நடைபெறுகிறது. இதுதானா ஒரு பெரிய காரியம் என்று தானே நினைக்கிறீர்கள் ? அந்த மற் போரின் சிறப்பை அறிய வேண்டுமாயின், அதற்குத் தமிழ் நாட்டின் கிராம வாழ்க்கை பற்றி ஓரளவு அறிந்திருக்க வேண்டும்.

இன்றுகூடத் தமிழ் நாட்டுக் கிராமங்களில் ஒற்றுமை ஓரளவு காணப்படுகிறதென்றால், அன்றைய நிலைமை பற்றி அதிகம் கூற வேண்டா. உள்ளூரைச் சேர்ந்த மல்லரும், வீரரும், வேட்டைக்காரரும், புலவரும், பலர் இருப்பர். இவருள் சிலர் உண்மையிலேயே தம் கலைகளில் வல்லவராயும் இருப்பர் ; பலர் போலிகளாவும் இருப்பர். எத்துணைப் போலிகளாக இருப்பினும், அந்தக் கிராமத்தார்கள் அவர்களை விட்டுக்கொடுக்க மாட்டார்கள். அதிலும், அயல் கிராமத்தானுக்கும் தன்னுடைய கிராமத்தானுக்கும் போட்டி ஏற்படும் பொழுதுதான், அவர்களுடைய உள்ளூர்ப் பற்றைக் காணவேண்டும் ! பற்று என்பது போய், வெறியாகக் கூடப் பல சமயங்களில் அது முடிந்துவிடும் !

'கிரிக்கெட்' விளையாட்டு உலக ஒற்றுமையை வளர்க்கிறது என்று கூறிக்கொள்கிறார்கள். ஆஸ்திரேலியர்கள் இங்கிலாந்தில் சென்று அடிக்கடி ஆடுகிறார்கள். ஆஸ்திரேலியர்கள் இந்த ஆட்டத்தில் மிகவும் சிறந்தவர்கள் என்பது பலரும் அறிந்த ஒன்றே. ஆங்கில நாட்டார்கள் மிகுந்த பண்பாடும் நாகரிகமும் உடையவர்கள் தாம். என்றாலும் என்ன ? ஆஸ்திரேலியருக்கும் ஆங்கிலேயருக்

கும் இடையில் நடக்கும் ஆட்டத்தில் ஆஸ்திரேலியர்கள் வெற்றி பெற்ற பல சமயங்களில் ஆங்கில மக்கள் எவ்வாறு நடந்துகொண்டார்கள் என்பதைச் செய்தித் தாள் படிக்கும் பலரும் அறிவர். உலக சோதரத்துவத்தை வளர்ப்பதாகக் கூறப்பெறும் 'கிரிக்கெட்' ஆட்டத்திற் கூடத் தம் ஊரவரைப் பிற ஊாரர் வெல்வதை அவ்வூரார் விரும்புவதில்லை என்றால், வேறு என்ன கூற வேண்டும்?

இன்று காணப்படும் இக்குறுகிய மனப்பான்மை அன்றையத் தமிழ் நாட்டில் ஓரளவு இருந்ததை யாரும் குறை கூற மாட்டார். நக்கண்ணையார் வீட்டை அடுத்துள்ள மன்றில் நடைபெற்ற மற்போரைக் காணலாம், வாருங்கள்!

இதோ, போர் தொடங்கி விட்டது. உள்ளூரைச் சேர்ந்த வீரன், அவ்வூரிலேயே சிறந்த மல்லன் என்று பெயரெடுத்தவன். அவ்வூரில் மட்டும் என்ன? அந்தச் சுற்று வட்டாரத்திலேயே அவனை வெல்லக் கூடிய வீரன் இல்லை என்றே கூறிவிடலாம். இதுவரை எத்தனையோ மற்போர் நடைபெற்றுங் கூட அவனே வெற்றி மாலை சூடினான். இந்தச் சூழ்நிலையில், எங்கோ ஓர் ஊரைச் சேர்ந்த ஒரு வீரன் இந்த ஊருக்கு வந்து, இந்த உள்ளூர் வீரனுடன் போராடப் போவதாகவும் அறிவித்து விட்டான். இச் செய்தி காட்டுத் தீப்போலப் பரவி விட்டது. கூட்டத்திற்குக் கேட்கவா வேண்டும்! ஒரே பெரிய கூட்டம்!

புதியவனாய் வந்துள்ள வீரன் யார்? பேரும் புகழும் உடையவனா அவன்? யாருக்குத் தெரியும், அவன் யார் என்று? செய்தித் தாள்களும், தபால் முதலிய வசதிகளும் இல்லாத அந்த நாட்களில் இவ்வீரன் வேறு இடங்களில் வெற்றி பெற்றிருந்தாலும் அதை அறிந்து கொள்ள வாய்ப்புகள் இல்லை அல்லவா? வந்தவனாவது, பலரும் அறியும்படி தன்னுடைய வீரத்தைப் பற்றியும், தான்

பெற்ற வெற்றிகள் பற்றியும் யாரிடமேனும் கூறிக்கொண் டானா? அதுதானே இல்லை!

வந்தவன் யார் என்று அறியாமலே போர் தொடங்கி விட்டது. கிராமத்தார் சற்றும் எதிர்பாராத வகையில் போர் நடைபெறுகிறது. சில விநாடிகளில் போர் முடிந்து விடும் என்று கருதினர் ஊரவர். ஊர் பெயர் அறியப்படாத புதிய வீரனைத் தம்முடைய ஊர் வீரன் சில விநாடிகளில் வென்று விடுவான் என்றே கருதி, வேடிக்கை பார்த்தனர் ஊரார். ஆனால், நடந்தது யாது? சில விநாடிகள், சில நிமிடங்களாகி, இன்னும் நீள்கிறது. வெற்றி தோல்வி அறியப்படாத முறையில் போராட்டம் நடைபெறுகிறது.

இறுதியில், வந்த வீரன் உள்ளூர் வீரனை வீழ்த்தப் போகும் சமயம், தன்னுடைய ஊரில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் தம் கண் எதிரே பெரு வீரனாய் வாழ்ந்த ஒருவன், தம்மவருள் ஒருவனாகக் கருதப் பெற்ற ஒருவன், வீழ்ந்துவிடப் போகிறான் என்பதை அறிந்த உள்ளூரார் சிலர், அவனைத் தாங்க ஆரம்பித்தனர்; 'அவனுக்குத் தான் வெற்றி' என்று பெருங் கூப்பாடு போட ஆரம் பித்தனர்.

நக்கண்ணையார் ஊரில் நடைபெற்ற மற்போரிலும் மக்கள் கூடி ஆரவாரித்தனர். சிலர் உள்ளூர் வீரன் பக்கம் சேர்ந்து கொண்டு, 'வெற்றி! வெற்றி!' என்று கூறினர்: கூப்பாடு போட்டனர். மற்றும் சிலர், புதியவனாய் வந்த வீரன் பக்கம் சேர்ந்து கொண்டு, அவனுக்கே 'வெற்றி! வெற்றி!' என்று கூப்பாடு இட்டனர். ஊர் இரண்டாய் பிரிந்து விட்டது. இரு சாராரும் தம் வீரனுக்கு வெற்றி என்று பெருங்குரல் எடுத்துக் கூவினர். போர் குழப்பத்தில் முடிந்து விட்டது. அந்த நாளில் இத்தகைய போர்களுக்கு 'நடுநோக்காளர் கள்' (Referees) வைக்கும் பழக்கம் இல்லை போலும்!

போர் நடைபெறுவதைக் கண்டு வெற்றி தோல்வி யாருக்கு என்று கூற ஊரார்கள் கூடி, ஒரு நடுநோக்காளரை நியமிக்கவில்லை என்பது உண்மைதான். ஆனால், இப்போராட்டம் தொடங்கினதிலிருந்து ஒரு பெண் தன்னைத்தானே நடுநோக்காளராக அமைத்துக் கொண்டதை ஊரார் யாரும் அறியவில்லை. அந்தப் பெண்ணும், கூட்டத்தில் கலந்து கொண்டு, இக்காட்சியில் ஈடுபடாமல், மிகவும் உயரமாய் அமைந்துள்ள தன் வீட்டின் புறக்கடையில் நின்று கொண்டே இப்போராட்டத்தைக் கண்டாள். பருத்து வளர்ந்திருந்த ஒரு பனை மரத்தில் சாய்ந்து கொண்டு போராட்டம் முழுவதையும் கண்டாள்.

இவ்வாறு கண்டு இறுதியில் அப்போராட்டத்தின் முடிவைக் கூறிய பெண்மணிதான் 'நக்கண்ணையார்' என்ற பெண்பாற் புலவர். புதிதாக அவ்வூருக்கு வந்த போர் வீரன் சோழன் போர்வைக்கோ பெருநற்கிள்ளி. ஆனால், அப்பொழுது அவன் அரசன் என்பதை யாரும் அறியார். அந்த ஊரானும் அல்லனாகையால், அவன் பெற்ற உண்மையான வெற்றியைக்கூட அவ்வூரார் மதிக்கவில்லை. ஆனால், உண்மையை நேரே கண்ட புலவர் இதோ பாடுகிறார் :

''எம் தலைவனாகிய கிள்ளிக்கு இது ஊரும் நாடும் அன்று. ஆதலால், ஒரு சிலர் அவன் வெற்றி பெற வில்லை என்றனர் ; சிலர் அவன் பெற்றது வெற்றியே என்றனர். இவ்வாறு இரண்டு கட்சியாய்ப் பிரிந்து ஊரார் கூவியது வேடிக்கையாக உள்ளது. காலில் உள்ள சிலம்பு குலுங்க யான் ஓடி என் வீட்டின் புறக்கடையில் உள்ள பனை மரத்திற் சாய்ந்து கொண்டு, அவன் வெற்றி பெற்றதை என் கண்ணாற் கண்டேன் !'' என்னும் பொருளில் பாடல் உள்ளது.

**'என்னைக்கு ஊர்இஃது அன்மை யானும்**
**என்னைக்கு நாடுஇஃது அன்மை யானும்**

ஆடுஆ டென்ப ஒருசா ரோரே !
ஆடுஅன்று என்ப ஒருசா ரோரே !
நல்ல பல்லோர் இருநன் மொழியே !
அம்சிலம்பு ஒலிப்ப ஓடி எம்மில்
முழாஅரைப் போந்தை பொருந்தி நின்று
யான்கண் டனன்அவன் ஆடுஆ குதலே !'

(புறம். 85)

[ஐ—தலைவன் ; ஆடு—வெற்றி ; அரை—மத்தளம் போன்ற அடியையுடைய பனைமரம்]

ஊர் பேர் தெரியாத இவ்வீரனிடத்தில் புலவர் நக்கண்ணையாருக்குக் காதல் பிறந்த கதையை அடுத்துக் காண்போம்.

## 16. புலவர் காதல்

புலவர் நக்கண்ணையாரின் ஊரில் நடைபெற்ற மற்போரில், புதியவனாய் வந்த இளைய வீரன் பழைய உள்ளூர் வீரனை வெற்றி கண்டான் என்பதையும், அவ்வெற்றியை விரும்பாத சில உள்ளூர் வாசிகள் வந்தவன் வெற்றி பெறவில்லை என்று கூச்சலிட்டார்கள் என்றும் கண்டோம். மேலும் அவர்கள் யாது கூறினாலும், வந்தவன் பெற்ற வெற்றியை நக்கண்ணையார் கண் ணாரக் கண்டார் என்றும் கண்டோம்.

நக்கண்ணையார் புதிய வீரன்மேல் காதல் கொண் டார் ; காதல் கொண்ட பிறகே அவனைப் பற்றிய செய்தி களை அறிய ஆவல் கொண்டார். ஆனால், பெண்ணாகிய அவருடைய ஆவலைத் தணிக்கக் கூடியவர் யார் ? இளம் பருவம் உடையவராகிய அவர் யாரிடஞ் சென்று தம் விருப்பத்தை அறிவிக்க முடியும் ? தம்முடைய காதலால் விளைந்த துன்பத்தைப் பற்றி அறியவே அவருக்குச் சற்று

நேரம் ஆயிற்று. ஒருவாறு அவனைப்பற்றி அறிய வேண்டும் என்னும் ஆவல் தூண்ட, வீட்டை விட்டு வெளியே புறப்பட்டார் நக்கண்ணையார்.

புலவர் பெருமாட்டியார் வீரனைப்பற்றி விசாரிப்பதற்காக மன்றத்தை அடையும்பொழுது, மற்போர் முடிந்து அவரவர் வீடு செல்வதற்காகக் கலைந்து கொண்டிருந்தனர். புதிய வீரனைப் புலவர் தேடினார். பிறரிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் போலத் தோன்றினாலும், உடன் பிறந்ததாகிய நாணம் அவரைத் தடை செய்துவிட்டது. பிறருடைய உதவியை நாடாமல் தாமே தேடிப் பார்த்தார்.. இந்நிலையில் சுற்றுப்புறத்தில் உள்ளவர்கள் பேசிக்கொள்ளும் சொற்கள் அவருடைய காதுகளில் விழுந்தன.

போர் முடிந்ததும் வெற்றி பெற்ற அப்புது வீரன் யாருடைய பாராட்டுதலையும் பெற்றுக்கொள்வதற்காக நிற்கவில்லையாம். அவனை வாழ்த்த வேண்டும் என்று அவனருகில் ஓடியவர்களையும் அவன் சட்டை செய்யவில்லையாம் ; தன் வேலை முடிந்தவுடன் வந்த வழியே திரும்பிப் போய்விட்டானாம்.

ஒரு சிலர், அவன் மிகவும் ஆணவம் கொண்டவன் என்று கூறிக்கொண்டனர். இன்னுஞ் சிலர், ஊரார்மேல் குற்றங்கூறினர் ; "அவன் வெற்றியை ஒப்புக்கொள்ளாமல் 'வெற்றி இல்லை' என்று கூச்சலிட்ட இவ்வூர் மக்கட்கு அவன் செய்த மரியாதை சரிதான் !" என்று கூறினர்.

புலவர் நக்கண்ணையார் அவர்கள் பேசுவன அனைத்தையும் கேட்டுக்கொண்டுதான் இருந்தார். ஊராருடைய பல கட்டுரைகளைச் சட்டை செய்யாமல், வெற்றி பெற்ற வீரன் போய்விட்டான் என்று அவர் கேட்ட பொழுது, அவருடைய மனத்தில் இனந்தெரியாத ஒரு மகிழ்ச்சி நிரம்பிற்று. 'இந்த ஊரார்க்கு இந்த அவமானம் வேண்டும் ! வேண்டும் !' என்று அவர் தமக்குள் கூறிக்கொண்டார்.

தம்முடைய அன்பைப் பெற்றவனை இந்த ஊரார் எவ்வளவு அவமானப்படுத்தி விட்டனர்! அவன் உயிரைப் பணயம் வைத்துப் பெற்ற வெற்றியைக் கூடப் பாராட்டாத இந்த ஊரார், இருந்தால் என்ன, ஒழிந்தால் என்ன! புதிய வீரன் ஊராரை அவமரியாதை செய்ததால் ஓரளவு மகிழ்ச்சியடைந்த நக்கண்ணையாருக்கு அம்மகிழ்ச்சியின் முடிவில் ஓர் இடி காத்திருப்பது தெரியவில்லை. தம் காதலனை— ஊர் பேர் தெரியாத காதலனை— இனிக் காணமுடியாது என்ற உண்மை புலப்படச் சிறிது நேரமாயிற்று. அது புலப்பட்டவுடன் அவர் துயரக் கடலில் ஆழ்ந்து விட்டார். வீரன் ஊராரை அவமானம் செய்கின்ற முறையில் போய்விட்டான் என்பதால் பெற்ற மகிழ்ச்சியை, இனித் தாமும் அவனைக் காண முடியாது என்பதில் பெற்ற வருத்தம் அடக்கி மேலெழுந்து விட்டது. இவ் வதிர்ச்சியால் புலவராகிய நக்கண்ணையார் பெரிதும் இடிந்துவிட்டார்.

நாட்கள் ஓடி மறைந்தன. புலவர்தம் காதல் மட்டும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வரலாயிற்று. காதல் வளர வளர, உடம்பு இளைக்கலாயிற்று. உடம்பு இளைத்து விட்டமையின், கைகளில் உள்ள வளையல்கள் கழன்று விழலாயின. பல முறை வளையல்கள் தாமாகவே கழன்று விழுவதைத் தாய் கண்டுவிட்டாள். நன்கு கற்றுக் கவிதை இயற்றும் ஆற்றல் படைத்தவளாயினும் மகள் மணப் பருவத்தை அடைந்து காதல் நோயால் வாடுகிறாள் என்பதைக் கண்டு கொண்டாள் தாய்.

நக்கண்ணையார் பாடு மிகவும் திண்டாட்டமாகி விட்டது. உயிர்த்தோழி ஒருத்தியுண்டு. தம் காதலை மெள்ள அவளிடம் கூறினார் புலவர். என்றோ ஒரு நாள் ஊருக்குள் வந்துவிட்டு மறைந்துவிட்ட ஒருவன்மேல் காதல் கொண்டாள் என்றால் ஊரார் சிரிக்க மாட்டார்களா? இதற்குள் இந்தச் செய்தி எப்படியோ ஊருக்குள் பரவிவிட்டது.

இளம் பெண்களுடைய காதலைக் கண்டால் எள்ளி நகையாடி வம்பு பேசும் இந்த ஊருக்குப் புலவருடைய காதலைக் கேட்டவுடன், பேச்சுக்கு நிறைந்த விஷயம் அகப்பட்டுவிட்டது. 'ஐயோ, பாவம்! ஊர்பேர் தெரியாத ஒருவனிடம் காதல் கொண்டு அல்லல் உறுகின்றாளே!' என்று கருணை காட்டுவதற்குப் பதிலாக இப்பொழுது ஊரார் பழி தூற்றுகின்றனரே! இவர் துன்புற்று அழியக் கடவர்!

இவ்வருத்தம் அனைத்தையும் சேர்த்துப் புலவர் இதோ பாடுகிறார்: "காலில் கட்டப்பெற்ற வீரக் கழலை அணிந்த கரிய குஞ்சியையுடைய காளை போன்றவனாகிய வீரன் காரணமாக என்னுடைய வளையல்கள் கழல்கின்றன. அவை கழல்வதை எங்கே தாய் பார்த்துவிடப் போகிறாளோ என அன்னைக்குப் பயப்படுவதா, போர் புரிகின்ற அவனுடைய தோளை அணைய வேண்டின் அதற்கு நாணம் அடைவதா? இரண்டில் எதனைச் செய்வதென்று அறியாமல் அல்லல் உறுகின்ற என்னைப்போல, பழி தூற்றும் இந்த ஊரும் அல்லல் உறுவதாக!" என்ற பொருளில் பாடுகிறார்:

**"அடிபுனை தொடுகழல் மையணல் காளைக்குஎன்**
**தொடிகழித் திடுதல்யான் யாய்அஞ் சுவலே!**
**அடுதோள் முயங்கல் அவைநா ணுவலே!**
**என்போல் பெருவிதுப் புறுக என்றும்**
**ஒருபால் படாஅ தாகி**
**இருபால் பட்டஇம் மையல் ஊரே!"** (புறம். 83)

புலவர் இவ்வாறு தம் வருத்தத்தைக் கவிதையாகப் புனைந்து கொண்டிருக்கும் நாளில் ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. யாரோ ஒருவர் நக்கண்ணையாரின் தாயிடம் பேசிக்கொண்டிருந்தனர்.

வந்தவர்கள் பேசிய பேச்சிலிருந்து ஓர் உண்மை வெளிப்பட்டு விட்டது. நக்கண்ணையாரைப் பற்றிய

க்வலை அவர்கட்கு ஒரு சிறிதும் இல்லை; அதற்குப் பதிலாக, ஊர் பெயர் தெரியாத ஆண்டியிடம் அவர் கொண்ட காதல் எவ்வளவு பைத்தியக்காரத் தனமானது என்று எடுத்துக்காட்டவே அவர்கள் முனைந்து நிற்கிறார்கள். அன்புடையவர்கள் போல நடிக்கும் அவர்கள், அவருடைய காதலையும் காதலனையும் பழிப்பதற்கல்லவா வந்துள்ளார்கள்!

அட, பாவிகளா! எவ்வளவு துணிச்சல் இவர்கட்கு! தம்முடைய காதலன் பிச்சைக்காரனாம்! தாய் தந்தையற்ற அனாதையாம்! அன்றாடம் கூழ் குடிப்பதற்குக் கூடத் திண்டாட்டமாம்! இருந்துவிட்டுப் போகட்டுமே! இவர்கள் வீட்டில் அவன் வந்து கூழ் ஊற்றுங்கள் என்று கேட்டானா? இவர்கள் முகத்தில் கரியை வழித்துப் பூசுவது போலத்தானே அவன் திரும்பிக்கூடப் பாராமல் போய் விட்டான்? அந்த வீரனைப் பழிக்க எப்படித்தான் இவர்கட்குத் துணிவு பிறந்தது?

கூழ் குடிக்கும் வீரனிடத்தில் விருந்துண்ணும் இவ் வீரன் பட்ட பாட்டை இவ்வூரார் கண்களிருந்தும் காண வில்லையா? காண மறுத்தது யாருடைய குற்றம்? புரட்டிப் புரட்டி அடித்தானே அவளுடைய காதலன், உள்ளூர் வீரனை! உப்பு வாணிகர், பழைய நாளில் வண்டிகளில் உப்பு மூட்டைகளை ஏற்றிக் கொண்டு ஊர் ஊராகச் சென்று வாணிகம் செய்வர். நிறைந்த பாரம் ஏற்றிய அந்த வண்டிகளை மாடுகள் முண்டியடித்துக் கொண்டு இழுத்துச் செல்லும். சேறு நிறைந்த ஆற்றங் கரையாய் இருந்துவிட்டால், மாடுகளின் பாடு திண்டாட்டந்தான்! எனவே, வணிகர் இத்தகைய சேறு நிறைந்த துறைகளைக் கண்டால் அஞ்சி நடுங்குவர். அதே போலப் புதிய வீரனைக் கண்டவுடன் உள்ளூர் வீரர் அனைவரும் அஞ்சி நடுங்கி விட்டனர். ஊரார்கள் தாய்க்குப் புத்திமதி கூறுவதைக் கேட்ட புலவர்க்கு அவர்கள் மேல் ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. சுடச்சுட அவர்கட்கு விடை

கூற முனைந்தார். அந்த விடையும், அவர் கவிஞர் ஆதலின், கவிதையிலேயே அமைந்துவிட்டது.

"என்னுடைய தலைவன் கூழ் குடித்தாலும் பெரிய தோளையுடையவன்! யான் வீட்டினுள் அடைபட்டிருப்பினும், பொன் போன்ற நிறங் கொண்டுள்ளேன். கூழ் குடிக்கும் என் தலைவன் போர்க்களம் புகுந்தால், எதிர்த்து வருகின்ற போர் வீரர்கட்கு எத்தகையவன், தெரியுமா? சேறு நிறைந்த ஆற்றுத் துறை வண்டிகளை ஓட்டிச் செல்லும் உப்பு வாணிகர்க்கு எவ்வளவு அச்சத்தைத் தருமோ, அவ்வளவு அச்சத்தைத் தருவான்!" என்ற பொருளில் பாடல் உள்ளது :

**"என்ஐ, புற்கை உண்டும் பெருந்தோ ளன்னே!**
**யாமே, புறஞ்சிறை இருந்தும் பொன்னன் னம்மே!**
**போர்எதிர்ந்து என்ஐ போர்க்களம் புகினே**
**கல்என் பேரூர் விழவுடை ஆங்கண்**
**ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு**
**உமணர் வெரூஉம் துறையன் னன்னே!"**

(புறம். 84)

[என்ஐ-என் தலைவன்; புற்கை-கூழ்; புறஞ்சிறை வீட்டினுள்; கல்என் பேரூர்-கல்லென்ற ஓசையையுடைய ஊர்; மள்ளர்க்கு-வீரர்கட்கு; உமணர் - உப்பு வாணிகர்; வெரூஉம் துறை-அஞ்சும் ஆற்று வழி]

புலவர் நக்கண்ணையாரின் காதல் அந்த வீரனால் திருப்பித் தர முடியாதபடி ஒருதலைக் காதலாக (கைக்கிளை) அமைந்து விட்டது வருத்தத்திற்கு உரியதாயினும், அதனால் பிறந்த கவிதைகள் வியக்கத் தகுந்தவை!

□ ○ □

## பேராசிரியரின் பிற நூல்கள்

1. கம்பன் புதிய பார்வை
(சாகித்ய அகாதெமி பரிசு)
2. தத்துவமும் பக்தியும்
3. மந்திரங்கள் என்றால் என்ன ?
4. இன்றும் இனியும் (அச்சில்)
5. குறள் கண்ட வாழ்வு ,,
6. தெள்ளாற்று நந்தி ,,
7. இளங்கோ அடிகள் யார் ? ,,

